உ

ஓம்.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீசற்குருவேநமா.



# கைவல்யநவநீதம்

## மூலமுமுரையும்

இம்மூலஞ்செய்தவர்,

நாராயணதேசிகர்மாணாக்கராகிய

## தாண்டவமூர்த்திசுவாமிகள்

இவ்வுரைசெய்தவர்,

திருத்துருத்தி.

கரபாத்திரசுவாமிகள்பரம்பரைக்குரிய,

நாகபட்டணம்.

## அருணாசலசுவாமிகள்

மாணாக்கராகிய

பிறையாற்று.

## அருணாசலசுவாமிகள்.

சாலிவாகனசகாப்தம் ௲௭௯௭.

குரோதி௵ - மாசி௴.

சென்னபட்டணம்.

வேதாந்தவிளக்கமென்னுமச்சுக்கூடத்தில்,

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

இதன்விலை - ரூ - ௫.

# உரைச்சிறப்புப்பாயிரம்.



சீர்வளர்பிரம சிருட்டியின் முன்னமே- யேர்வளர்சத்தா யிலங்குறு
பிரமம் - பரமுலை குயிலெனப் படுபொரு ளெவற்றினு - முரணுறு அச்
சுசாதியமுதலியபேத - மற்றொளிர்பரமா காச சயம்புவா - யுற்றதன்
னிலைமையி னேரிறைகுறையா - தெறிதிரைக்கரத்தா லிளமணிகொழிக்கு
ஞ்- செறிபுனற்பொன்னிசூழ் செம்பியனாட்டிற் - பொன்னிலத் தவரிழி
பொற்புறுபடியென - நன்னிலைமாடமார் நன்னிலமதனிற் - செந்தழ
லோம்புந் திறந்திரியாதுய- ரந்தணர்குலத்தி னவதரித்தருளிய- நாரா
யணகுரு நாண்மலர்ப்பதத்தைப் - பேராதவனருள் பெற்றிடுமதனன்-
முற்றுணர்தாண்டவ மூர்த்தியனுபவப் - பெற்றியினுலகோர் பேரின்ப
டையக்- கிளருய்வேதாந்தக் கிரோததியைத் - தளர்வறுசமாதித் தாழியி
னிறைத்திட் - டகமுறுவிசார வளவினாற்காய்ச்சி - மகிழ்குருவாக்கிய மத்
தாற்கடைந்து- ஞானகைவல்ய நவநீதத்தை - யானபேரன்பி னளித்தன
னதனை - யெளிதினியாவரு மின்புடன்றுய்க்க - வொளிர்மணக்கிருத
மா யுரைசெய்விக்கும்படி- சகவாழ்வனைத்துஞ் சத்தியமலவெனத் - திக
ழுறுமலைகான் சென்றுபல்தவத்தோ - ருடனுறைந்துட லொறுத் துணர்வு
றப்பட்டினத் தடிகளெனத்துறந் தர னுறை காசியை - நாடியாத்திரை
செயு நாட்டுக்கோட்டைப் - பீடுறுமருணசலப் பெருந்தவத்தோ - ன
ருளியமொழியினை யன்புட னுட்கொண் - டருளென நல்மகட் கணிகலை
யானா- நிலைக்கடல்வயிற்றி னிரப்பிப்பற்பல - கலைக்கட றன்னைக் கருத்து
ளடக்கிய -வகத்தியமுனிவாழ் பொதியமும்பொதிய- நகத்துறுசந்தன ம
ரமகிலுங்கொடு- நீர்வருபொருனையு நிகழுமந்நீரா- மேலர்பெறுசெநெ
ற் கரும்புனக்கன்னல் - கமுகெனக்கமுகுந் தெங்கெனத்தெங்குதா - ன
முதுகுமெழிலிக்கானகாலென்னத் - திகழ்வுறவளங்களுஞ்சேர்ந்தினிதோ
ங்கும்- புகழ்பெறுபாண்டிப் புத்தேனாட்டிற் - களைகளைகடைசியர் கண்
ணூடுறுமுக- டளைவுறுசாயையை யம்புயமீது- புல்லிதழ்க்குவளை பூத்த
தென்றதனை - வல்லிதிற்கையால்வவ்வுறக்கண்டாங் - குழத்தியர்புன்னகை
கண்டிடவுயங்கி- யுழவர்சஞ்ஞுறு மொண்டணைகுழும - வாதவூரடிகண்
மதியுருவாசப் - போதபூரணஞானிபூசுரனாகிக் - குருந்தடியமர்ந்தருள்
சோதிப்பெருந்துறை- மருங்கிற்பளிக்குமென் மாடத்துலவு- மின்னனை
ர்முகமதி தமைவிண்மதிதான் - றன்னாரகதனைக்கொளுமொன்னல-ரொ
ன்னலக்கலங்கி யெங்குறுமமயத் - தன்னூர்கூந்த லரவெனக்கண்டு- பயமற்
றேகுறும் பான்மையுமறையவர் - வயமுறுமரசர் வணிகர்சூத்திரர்முறை-
டினனுமாவித்திரா வயலெனுநகரோன - பொன்னிசூழ்பூம்புகார் வணி

## உரைச்சிறப்புப்பாயிரம்.

சீர்குலோத்தமன் - நாரியர்மனங்கண் ணயமுறநாடுஞ் - சீரியல்வேளிற் சி
றந்தநல்லொழிலான் - மாலைவண்டுணுநறுக் காந்தளுநவமணி - மாலையுமா
ர்பில் வயங்குவெண்கவிகையான் - அறிஞர்நல்குரவெனு மங்கிதணியப் -
பொறிவனஞ்சொரியுநற் புயல்கரமுடையான் - சித்திதுசட்டமீ தென்ற
வைதேர்ந்து - முத்தியைப்பெறமுயன் மூதறிவுடையோ - னில்லறமத
னிலிருந்துமெய்த்துறவே - நல்லறமெனவேகாந் தத்தைநண்ணி - சாது
சங்கத்தொடு சாத்திரார்த்தங்களை - மூதுணர்வுற்றித யோதிதன்மோன -
நிலையினின்றைம்புல நெறிச்செலு மனதை - யலைவுறாதடக்கு மடைக்கி
யப்பறிஞன் - ஈன்றிடுங்கறுத்தா னெனுமால்கேட்பச் - சான்றோரனுப
வச் சாம்பிரதாயந்தழீஇத் - தகைபெறும்பன்னூற் கருத்தையுந்தனது -
சுகானந்தமுந் தழுவியவ்வனலா - லுருக்குமவ்வுளாயிற் றுயர்பரானந்த -
கிருதமெனப்பெயர் கண்டுகிளத்தினன் - விண்ணவர்முதலோர் வீடுறுமெ
ய்த்தவ - நண்ணுறவந்துறுங் காவிரிநாட்டிடைத் - திருத்துருத்தியினோ
ர் தேசிகவரசா - யருமறைமுடிவா மாதனத்திருந்து - சித்தியாங்குறு நில
மன்னனாச்செயித்து - முத்திமாவுலகாண் டிடமுடிசூடு - மிந்திரபீட
த் தெறிற்சரபாத்திர - சுந்தரனடிமுடி சூடியதெத்தாத் - திரயனடிபெ
றுஞ் செங்கமலன்றன் - மருவுறுநாகையின் மன்னுபேரறிஞ - னகோ
சரசயம்பு வாகியவோர்முதல் - சுகோததியுருவாய்த் தோன்றருணசலக் -
குரவனடிமுடிகொண்டடியவர்க்குப் - பரவுணர்வாம்பொருள் காட்டுமெ
ய்ப்பானு - வோதருமுவகை விளக்குமுவாமதி - சாதனமொன்றுமி லாத்
தமியேனையு - மோர்பொருளாக வுவகையிற்கூவிச் - சீர்பதந்தலைமேற் றி
கழ்வுறச்சூட்டி - யொருமொழியமுதை யுள்ளுறவூட்டி - நிருவிகற்பாங்
க நிட்டையினிறீஇ - மிகுசொருபானு பூதியைவிளக்கிச் - சகசானந்தந்
தலைமீக்கொண்டு - சும்மாவிருக்கச் சுகமெனவருளிய - வெம்மானெழிலு
ற் றிலங்குமிறைசை. அருணசல சுவாமிகளெனத் - திருநாமம்பெறுந்
தேசிகோத்தமனே. உரைச்சிறப்புப்பாயிரமுற்றிற்று.

இஃது இந்நூ லுரை யாசிரியர் மாணக்கராகிய, இராமசாமிக்கவிராயர்
யா, வாத்தியார் முனியப்பமுதலியார், இவர்களாற்செய்யப்பட்டது.

கடவுள்வணக்கம்.

நிருவிகற்பசமாதியினின்றெழு *
ம், பொருவிலானந்தபோதனை *
ப்பேணுவா, மொருமைமுத்தி *
யுதவுகைவல்லிய, வருமைநூற் *
கெனுநின் றுளையாற்றவே. *

அருளிறைவணக்கம்.

ஒளிநிறைந்தவுணர்வின்பொரு *
மையே, களிகொண்மாணிடனுயு *
ருக்காட்டியிங், கெளிதினைகவ *
நதென்னையெனக்கரு, ளளிமல *
ர்ப்பதத்தையனையேற்றுவாம். *



உ

ஓம்.

சிவமயம்;

# கைவல்யநவநீதம்.

முதலாவது.

## தத்துவவிளக்கப்படலம்.



பாயிரம்.

(அவதாரிகை.)

வடநூலாராய்ச்சியில்வல்லமையுள்ளவிந்நூலாசிரியர்தாமடைந்த சுவாநுபூதிப் பிரத்தியக்ஷத்தை யுலகஞ் சுளுவிலடைந்தானந்தாதீதமாகும் பொருட்டருளினாற்சொல்லப்புகுந்த விந்நூலினிதுமுடிய வதனந்தரங்கமான பிரஞ்ஞானம் பிரமமென்னு மிருக்குவேத மகாவாக்கியார்த்தமாகவிளங்கு மத்துவிதஸ்வரூபத்தைவிலட்சணமாகவுஞ் சலட்சணமாகவுந் துதிப்பான்றொடங்கி யிச்செய்யுளிற் சமாதியின்கண்ணுதயமானவிலட்சணமாகியகூடஸ்தபிரமத்தைத்துதிக்கின்றார். *

பொன்னிலமாதராசைபொருந்தினர்பொருந்தாருள்ளந் *
தன்னிலந்தரத்திற்சிவ சாட்சிமாத்திரமாய் நிற்கு *
மென்னிலங்களினுமிக்க வெழுநிலமவற்றின்மேலா *
நன்னிலமருவுமேசநாயசன்பதங்கள்போற்றி. *

(இதனதுபதப்பொருள்)

பொன் - பொன்னினிடத்தும் — நிலம் - மண்ணினிடத்தும் — மாதர் - மடவாரிடத்தும் — ஆசைபொருந்தினர் - ஆசையுள்ள வஞ்ஞானிகளும் — பொருந்தார் - நிராசையுள்ளஞானிகளுமாகியவிவர்களது — உள்ளந்தன்னில் - இதயாம்பரத்தில் — அந்தரத்தின் - நான்குபூதங்களினு நிறைந்திருக்கின்றவாகாயத்தைப்போல — சிவசாட்சிமாத்திரமாய் - கூடஸ்தசைதன்யமாத்திரமாக — நிற்கும் - நிறைந்திருக்கின்ற — எந்நிலங்களினும் - எவ்விதமான நிலைகளிலும் — மிக்க - மேலாய — எழுநில

மவற்றில் - ஞானபூமிகளேழனுள் — மேலானநன்னிலமருவும் - முடிவாகி யதுரியபூமியிற்பொருந்திய — ஏகநாயகன் - ஒன்றாகிய பிரமசைதன்னியத்தின் — பதங்கள்போற்றி - திருவடிகளைவணங்குவாம் — என்றவாறு.

[பதசாரம்.]

சகலசமயங்களுக்குமேலானது ஞானபூமியென்பார் - எந்நிலங்களினுமிக்க வெழுநிலமெனவும், அவைகளின்முடிவானது துரியபூமியென்பார் - நன்னிலமெனவும், அதனிடமாக விளங்குகின்றது துரியாதீதமென்பார் - ஏகநாயகனெனவும், அஃதேதுரியஸ்வரூபமாய்ச் சொரூபமுதல் ஸ்தம்பபரியந்தஞ் சர்வவியாபகமாய் வியாபித்துவிளங்குவதென்பார் — பொன்னிலமாதராசை பொருந்தினர்பொருந்தாருள்ளந்தன்னிலந்தரத்திற்சிவசாட்சிமாத்திரமாய் நிற்குமெனவும், யாவர்க்குஞ்சைதன்னியத்தின்றற்பிரகாசமான கூடஸ்தபிரமமேயிடமென்பார் — பதங்களெனவும், அவைகளினைக்கியமேயத்துவிதமென்பார் - போற்றியெனவும், கூறினார். பொன்னிலமாதரென்பது - இச்சையைவிளைப்பதற்குக்காரணமான விடணாத்திரியமெனக்கொள்க. புத்திரேடணையென்பதை யவனுரிமையிற்பெறுவதாகியவரசின்மேல்வைத்துக்கூறினார். - - *

(இதன்றாற்பரியம்.)

அகோசரமானநிரதிசயானந்தவஸ்து கோசரிக்குமிடத்துப் பூரணானந்தமாகப்பிரவேசித்துநித்தியானந்தசாக்ஷாத்காரமாகத்தடித்து அதிலதீதமாகவிளங்குவதைப்பிரமமாகவுமஃதேவிடயசம்பந்தங்களிற்றாக்கற்றிருந்ததைப்பிரத்யேகாத்மஸ்வரூபமாகவுந்துதித்ததாம் ............... (க)

(அ-கை) இச்செய்யுளின்முற்கூறியவத்துவிதவஸ்துவைசகசநிட்டையிற் சலக்ஷணமாகவிளங்கியசுயஞ்சைதன்னியமாகத்துதிக்கின்றார்.

ஈன்றளித்தழிக்குஞ்செய்கைக்கேதுவாமயனாய்மாலா *
யான்றவீசனுமாய்த்தானேயனந்தமூர்த்தியுமாய்நிற்கும் *
பூன்றமுத்தனுமாயின்பப்புணரியாதவனாய்நாளுந் *
தோன்றியவிமலபோதசொரூபத்தைப்பணிகின்றேனே. *

(இ-ள்) ஈன்று - சிருட்டித்து — அளித்து - இரக்ஷித்து — அழிக்கும் - சங்கரிக்கும் — செய்கைக்கேதுவாம் - இம்முத்தொழிற்குமேதுவாகிய — அயனாய் - பிரமனாகியும் — மாலாய் - விஷ்ட்ணுவாகியும் — ஆன்றவீசனுமாய் - மாட்சிமையுள்ளவுருத்திரனாகியும் — அனந்தமூர்த்தியுமாய் - இன்னுமநேகவடிவங்களாகியும் — நிற்கும் - இருக்கின்ற — பூன்றமுத்தனுமாய் -

பூரணமானமுத்தனாகியும்— இன்பப்புணரியாதவனாய் - ஆநந்தசமுத்தி
ரத்திலுதிக்குஞானசூரியனாகியும்—நானாந்தோன்றிய - சதோதயமாகிய—
விமலபோத - சுத்தசைதன்னியமான — சொரூபத்தைப்பணிகின்றேன் -
பிரமஸ்வரூபத்தைவணங்குகின்றேன் —(எ-று) - - - *

[ப-ம்] தனதுஸ்புரணமெல்லாந் தனதுவடிவமாக விளங்குமென்
பார் - அயனாய்மாலாயான்றவிசனுமாய்த்தானேயனந்தமூர்த்தியுமாநிற்
குமெனவும், பேரின்பவிளக்கமேசைதன்னியமென்பார் - இன்பப்புணரி
யாதவனெனவும், உற்பத்திதிதிலயங்களின்றிவிளங்கினசுத்தசைதன்னிய
மென்பார் - நானாந்தோன்றியவிமலபோதசொரூபமெனவும், கூறினார்.
(இ-ம்) சர்வம் பிரமமயமென்னுமுபதேசவாக்கியப்படிக்குஸ்வரூபசா
க்ஷாத்காரமானசுத்தசைதன்னியத்தைத்துதிசெய்ததாம் ..... ....... .....(உ)

(அ-கை) முற்கூறியவாத்மஸ்வரூபமேபடிவமானவருளிறையையதீதமா
கவுஞ் சாக்ஷாத்காரமாகவுந்துதிக்கத்தொடங்கியிக்கவியிலதீதமாகத்து
திக்கின்றார்.

எவருடையருளால்யானேயெங்குமாம்பிரமமென்பாற் *
கவருடைப்புவனமெல்லாங்கற்பிதமென்றறிந்து *
சுவரிடைவெளிபோல்யானேசொரூபசுபாவமானே *
னவருடைப்பதுமபாதமனுதினம்பணிகின்றேனே. *

(இ-ள்) எவருடையருளால் - யாருடையகிருபையினால் — யானே - நா
னே— எங்குமாம்பிரமம் - எவ்விடத்திலுநிறைந்திருக்கின்றபிரமஸ்வரூப
மும் — என்பால் - என்னிடத்தில் — கவருடைப்புவனமெல்லாம் - தோ
ற்றிவிரிந்திருக்கின்றவுலகமுழுவதும் — கற்பிதமென்றறிந்து - பொய்யெ
ன்றறிந்து — சுவரிடைவெளிபோல் - சுவரிடத்திருக்குங்ககனம்போல—
யானே - நானே — சொரூபசுபாவம் - பிரமசுபாவமும் — ஆனேன் - ஆயி
னேன் — அவருடை - அவரது — பதுமபாதம் - கமலமலர்போன்றதிரு
வடிகளை — அனுதினம் - எப்போதும் — பணிகின்றேன் - வணங்குகின்
றேன்.— (எ-று) - - - - - - - *

[ப-ம்] சர்வம்பிரமமென்பார் - எங்குமாம்பிரமமெனவும், சர்வமுமி
ல்லையென்பார் - கவருடைப்புவனமெல்லாங்கற்பிதமெனவும், யாவுந்தன்ம
யமாகவிளங்குவனாவென்பார் - சொரூபசுபாவமானேனெனவும், கூறினார்.
(இ-ம்) சர்வமாய்ச்சர்வமிலதாயிருக்கின்ற தன்னைத்தன்னிடத்துத் தானாயி
ருந்துவிளக்கியகுருதுரியத்தைவணங்கினதாம் .............................. .....(௩)

(அ-கை.) இச்செய்யுளிற்சற்குருசொரூபத்தைச்சாக்ஷாத்காரமாகத் துதிக்கின்றார்.

என்னுடைமனதுபுந்தியிந்தியசரீரமெல்லா *
மென்னுடையறிவினலேயிரவிமுன்னிமமேயாக்கி *
யென்னுடைநீயுநானுமேகமென்றைக்கியஞ்செய்ய *
வென்னுடைகுருவாய்த்தோன்றுமீசனையிறைஞ்சினேனே. *

(இ-ள்.) என்னுடை - என்னுடைய — மனதுபுந்தி - மனம்புத்திகளாகியவந்தக்கரணமும் — இந்தியம்- ஞானேந்திரியகன்மேந்திரியங்களும் — சரீரம்- தூலதேகமுமாகிய— எல்லாம்- இவைகளனைத்தும்— என்னுடையறிவினல்- எனதாத்மஞானத்தினல்— இரவிமுன்னிமமேயாக்கி- சூரியனைக்கண்டபனியைப்போலச்செய்து — என்னுடை - எனதுசுபாவமான— நீயும்- நீயென்னுங்கூடஸ்தனும்— நானும் - தானென்னும்பிரமமும்— ஏகமென்று- ஒன்றேயென— ஐக்கியஞ்செய்ய- அத்துவிதமாக்க— என்னுடைகுருவாய்- எனதாசாரியராக— தோன்றுமீசனை- உதயமானவருளிறையை— இறைஞ்சினேன்- வணங்கினேன் —(எ-று) *

[ப-ம்] தனதுபிரியத்தடிப்பே குருஸ்வரூபமென்பார்- என்னுடைகுருவெனவும், தன்னையிரக்ஷிக்கநிமித்தமுதயமானதருளிறையென்பார்- ஈசனெனவும், கூறினர் (இ-ம்) மனமுதலியதத்துவங்களனைத்தையுஞ்சமாதிஞானத்தினற் கரைத்ததனி லுதயமாகுமானந்தமாகிய வஃதே விஃதிஃதேவஃதென்னு மத்துவிதஸ்வரூபத்தைத் தரிசிப்பிக்கும் பொருட்டுப் பூரணமேயோருருவாகவெழுந்தருளியவாசாரியனைவணங்கினதாம் (சு)

(அ-கை) தனதாசிரியனை வணங்கி யவரருளினற் கூறப்புகுந்தவிந்நூன் முகத்திதிற்கூறப்படும்விடயமுமிதனலுண்டாகும்பயனுமிந்நூற்குமிதிற்கூறப்படுவதாகிய விடயத்திற்குமுள்ள சம்பந்தமுமிது கேட்டற்குரியவதிகாரியுமாகிய வனுபந்த சதுட்டய மிந்நூற் கற்குமாணக்க னுணரும் பொருட் டுரைக்கவேண்டுதலி னவற்று ளதிகாரியும் விடயமு மிச்செய்யுளிற்கூறுகின்றார்

அந்தமுநடுவுமின்றியாதியுமின்றிவான்போற் *
சந்ததமொளிருஞானசற்குருபாதம்போற்றிப் *
பந்தமும்வீடுங்காட்டப்பாந்தநூல்பார்க்கமாட்டா *
மைந்தருமுணருமாறுவல்துதத்துவஞ்சொல்வேனே. *

(இ-ள்.) அந்தமுநடுவுமின்றியாதியுமின்றி - ஆதிமத்தியாந்தரகிதமாய்—வான்போல்- ஆகாயத்தைப்போல — சந்ததமொளிரும்- சதோதய

மாய்விளங்குகின்ற — ஞானசற்குருபாதம்போற்றி - ஞானசாரியரதுபாதத்தைவணங்கி— பந்தமும்வீடுங்காட்ட - பெந்தமுமுத்தியுமாகியவிவைகளின் ஸ்வரூபத்தைத்தெரிவிக்கும் பொருட்டு — பரந்த - விரிந்திருக்கின்ற— நூல் - வேதாந்தசாத்திரங்களை — பார்க்கமாட்டாமைந்தரும் - ஆராய்ந்தறியச்சத்தியில்லாதசீடரும் —உணருமாறு - எளிதிலுணரும்படி — வஸ்துதத்துவஞ்சொல்வேன் - பரவஸ்துவினுண்மையைச்சொல்வேன் எ-று

மைந்தரென்பததிகாரியெனவும். வஸ்துதத்துவமென்பது விடயமெனவுங்கொள்க. பாந்தநூல்பார்க்கமாட்டா மைந்தருமென்னு மும்மையாற்பார்ப்பவர்களுளென்பதுமாயிற்று. [ ப-ம் ] காலமுதலியவை நசிக்கினுந்தானசியாதிருத்தலின் - அந்தமின்றெனவும், இடையின்றித்தான்பூரணந்தமாகவிளங்குதலின் - நடுவின்றெனவும், எப்போதுந்தான்சுயமாய்ப்பிரகாசித்தலின் - ஆதியுமின்றியெனவும், இங்ஙனஞ்சதோதயமாகவிளங்கியசச்சிதானந்தமானசுத்தசைதன்னியமே குருசொரூபமாதலால் - சந்ததமொளிருஞானசற்குருவெனவும், தானதன்மயமாய் நிற்றலின் - பாதம்போற்றியெனவும், கல்வியல்லலெனக்கண்டதின்காரமான தன்னைவினாவிற்றெரிந்துகொள்ளவிருப்பமுற்றவர்களெளிதினுணரும்படியுணர்த்துதலின் - பரந்தநூல்பார்க்கமாட்டாமைந்தருமுணருமாறுவஸ்துதத்துவஞ்சொல்வேனெனவும், கூறினர்.... .................................... (ரு)

(அ-கை) இச்செய்யுளிற்சம்பந்தமும்பிரயோசனமுங்கூறுகின்றார்.

படர்ந்தவேதாந்தமென்னும்பாற்கடன்மொண்டுமுன்னூற் *
குடங்களினிறைத்துவைத்தார்குரவர்களெல்லாங்காய்ச்சிக் *
கடைந்தெடுத்தளித்தேனந்தக்கைவல்யநவநீதத்தை *
யடைந்தவர்விடயமண்டின்றலைவரோபசியிலாரே. *

(இ-ள்) படர்ந்த - விரிந்திருக்கின்ற — வேதாந்தமென்னும் - உபநிடதமென்னும்—பாற்கடன்மொண்டு - க்ஷீரசமுத்திரத்தின்முகந்து—முன்னூற்குடங்களில் - முன்னூலாகியகடங்களில் — குரவர்கள் - ஆசிரியர்கள் — நிறைத்துவைத்தார் - பூரித்துவைத்தார்கள் — எல்லாங்காய்ச்சி - அவைகளனைத்தையுங்காய்ச்சி—கடைந்து - கடைதல்செய்து— இந்தக்கைவல்யநவநீதத்தை - இந்ஞானசாத்திரமாகியகைவல்யநவநீதத்தை — எடுத்தளித்தேன் - எடுத்துக்கொடுத்தேன்— அடைந்தவர் - இதைப்புசித்தவர்கள் —பசியிலார் - நித்தியதிருத்தியடைந்தவர்களாதலால் — விடயமண்டின்று - விடயானந்தமென்னுமண்ணைப்புசித்து — அலைவரோ - பவத்திற்சுழல்வார்களோசுழலார். — (எ-று) கைவல்யநவநீதமென்பது சம்பந்தமு

ம், அடைந்தவர்பசியிலாரொன்பது - பிரயோசனமுமாமெனக்கொள்க. *

[ப-ம்] வேதமுடிவானமகாவாக்கியமோர்மொழியாயினுமஃதுசீடனுக்குப்போதமாகும்பொருட்டுண்டான சுத்த வேதாந்த சாத்திரங்களுக்களவின்மையால் - படர்ந்தவேதாந்தமென்னும்பாற்கடலெனவும், அவைகளிற்றங்களுக்கனுபவமாகும்பொருட்டாசிரியரெடுத்தறிவித்தவாக்கியங்களையெடுத்துக்கோடலை - மொண்டெனவும், தாம்பெற்றபேறுலகம்பெறும்படி பாவினமாகிய நூல்களி லவ்வாக்கியங்களையமைத்தலை - முன்னூற்குடங்களினிறைத்துவைத்தார்குரவர்களெனவும், அப்பல சாத்திரங்களிலுள்ள வாக்கியங்களைச்சேகரித்தலை - எல்லாமெனவும், அவ்வாக்கியங்களின்பூருவபக்ஷத்தைநீக்கிவிசாரத்தாற்சித்தாந்தப்படுத்துதலை - சாய்ச்சியெனவும், அச்சித்தாந்தத்தைக் குருவுபதேசத்தாற்சமாதியிலனுபவமாகவாராய்தலை - கடைந்தெனவும், அஃதிலுதயமான நிருவாணசுகத்தையெடுத்தோர் நூலாசத்தந்ததை - எடுத்தளித்தேனிந்தக்கைவல்யநவநீதத்தைபெயனவும், இஃதைப்பெற் றனுபவித்துத் திருத்தியடைதலை - அடைந்தவர்பசியிலாரெனவும், இவ்வாருடர் விடயவிச்சையினுற சநநமாணத்திற்சுழலாரொன்பதை - விடயமண்டின்றலைவரோவெனவும், கூறினார். (இ-ம்) பிரமமென்னுங்காமதேனுவிற்சுரந்தசுருதிகளென்னும்பாலை - விசாரமென்னுமக்கினியாற்பூருவபக்ஷமென்னுநீர்சுண்ட - சித்தாந்தமென்னுமதுரமிகக்காய்ச்சி - விருத்திஞானமென்னும்பிரைகுத்தி - உபதேசமென்னுமத்திட்டு - அனுபவவாராய்ச்சியென்னுங்கடைதலைச்செய்ததிலெழாநின்றகைவல்யமென்னுநவநீதத்தை - அனுபவித்தலையடைந்து - நித்தியதிருத்தியானபசியிலார் - விடயானந்தமானமண்ணைப்புசியார்களெனக்கூறினதாம். (௯)

(அ-கை) உபாசனமூர்த்தியைவணங்கியிந்நூலின்படலவகைகூறுகின்றார்

முத்தனை வேங்கடேசமுகுந்தனையெனையாட்கொண்ட *
சுத்தனைவணங்கிச்சொல்லுங்கைவல்ய நவநீதத்தைத் *
தத்துவவிளக்கமென்றுஞ்சந்தேகந்தெளிதலென்றும் *
வைத்திருபடலமாகவகுத்துரை செய்கின்றேனே. *

(இ-ள்) முத்தனை - பாசங்களைநீக்கிநிற்பவனை — வேங்கடேசமுகுந்தனை - வேங்கடாசலபதியாகியதிருமாலை — எனையாட்கொண்டசுத்தனை - என்னையடிமைகொண்டவிறைவனை — வணங்கி - பணிந்து — சொல்லுங்கைவல்யநவநீதத்தை - உரைக்குங்கைவல்யநவநீதமென்னு ஞானசாத்திரத்தை —

தத்துவவிளக்கமென்றும் - தத்துவவிளக்கமெனவும் — சந்தேகந்தெளி வென்றும் - சந்தேகந்தெளிதலெனவும் — வைத்து - நாமந்தரித்து— இருபடலமாகவகுத்து - இரண்டுபடலமாகப்பிரித்து— உரைசெய்கின்றேன் - சொல்லுகின்றேன். — (எ - று) - - - - ✻

(இ-ம்) வெளிப்படை. (பாயிரமுற்றிற்று) (எ)

(அ - கை) முற்கூறியபடலங்களுள் - தத்துவவிளக்கமென்னும்படலத்திற் றத்துவத்தைவிளக்கும் பொருட்டு முதற்கண் அதுகேட்குமதிகாரிக்குரிய சாதனசதுட்டயவிலக்கணங்கூறுகின்றார்.

நித்தியவநித்தியங்கணிண்ணயந்தெரிவிவேக ✻
மத்தியவிகபரங்கள்வருபோகங்களினிராசை ✻
சத்தியமுரைக்கவேண்டுஞ்சமாதியென்றாறுகூட்ட ✻
முத்தியைவிரும்புமிச்சைமொழிவர்சாதனமிந்நான்கே. ✻

(இ-ள்) நித்தியவநித்தியங்கள் - நித்தியாநித்தியவஸ்துக்களின்— நிண்ணயந்தெரிவிவேகம் - நிச்சயந்தெரிகின்றவிவேகமும்— மத்திய - இடையினுள்ள—இகபரங்கள் - இகலோகபரலோகங்களில்— வருபோகங்ளின் - உண்டாகின்றசெல்வங்களில் — நிராசை - விராகமும் — சத்தியமுரைக்க வேண்டும் - உண்மையாகச்சொல்லத்தகுந்த — சமாதியென்றாறுகூட்டம் - சமாதிசட்கசம்பத்தியும்— முத்தியைவிரும்புமிச்சை - முமூட்சுத்துவமுமாகிய—இந்நான்கும் - இந்நான்கையும்— சாதனம் - சாதனசதுட்டயமென்று—மொழிவர் - சத்துக்கள்சொல்லுவார்கள்.—(எ - று) ......(அ)

(அ - கை.) [இதுவுமது]

சமந்தமம்விடல்சகித்தல்சமாதானஞ்சிரத்தையாறுஞ் ✻
சமமகக்கரணதண்டந்தமம்புறக்கரணதண்ட ✻
மமர்மனைவியசாரங்களறுகலேவிடலென்றாகு ✻
மமர்செயுஞ்சுகதுக்காதியனுபவிப்பதுசகித்தல். ✻

(இ-ள்) சமம் - சமமெனவும் — தமம் - தமமெனவும் — விடல் - உபரதியெனவும் — சகித்தல் - திதீட்சையெனவும் — சமாதானம் - சமாதானமெனவும் — சிரத்தை - சிரத்தையெனவும்— ஆறும் - ஆறாகும்— சமம் - சமமாவது—அகக்கரணதண்டம் - அந்தக்கரணத்தைத்தண்டித்தலாம்— தமம் - தமமாவது—புறக்கரணதண்டம் - புறத்தின்கண்ணுள்ளதசேந்திரியங்களைத்தண்டித்தலாம்— விடல் - விடலென்பது— அமர்மனைவியசாரங்கள் - விரும்பப்பட்டகுடும்பவியசாரங்களை — அறுகலென்றாகும் - சுருங்கச்

செய்தலாம் — சகித்தல் - சகித்தலாவது — அமர்செயும் - கலகஞ்செய்கி ன்ற — சுகதுக்காதி - இன்பதுன்பமுதலியனவகளை — அனுபவிப்பது - பிராரத்தமென்றுசமசித்தமாயனுபவிப்பதாம். —(எ - று) .......... (கூ)

(ஆ - கை) [இ - து]

சிரவணப்பொருளைத்தானேசித்தஞ்சிந்திக்குமாறு *
சரசமாய்வைக்குமித்தைச்சமாதானமென்பர்மேலோர் *
பரமசற்குருநூலன்புபற்றலேசிரத்தையாகும் *
வரமிகுசமாதியாறுவகையாஞ்சொற்பொருளிதாமே. *

(இ - ள்) சிரவணப்பொருளை - வேதாந்தசிரவணார்த்தங்களை — சித்தம் - உள் ளமானது — சிந்திக்குமாறு - பிரியமாய்ச்சிந்திக்குபடி — சரசமாய்வைக்கு ம் - இனிபதன்மையாகச்செய்யும் — இத்தை - இதை — மேலோர் - மகான் கள் — சமாதானமென்பர் - சமாதானமென்றுசொல்லுவார்கள் — பரம சற்குரு - மேலானவாசிரியரிடத்தும் — நூல் - வேதாந்தசாத்திரங்க ளிடத்தும் — அன்புபற்றல் - அன்புவைத்தல் — சிரத்தையாகும் - சிரத் தைபாம் — வரமிகு - மேன்மைமிகுந்த — சமாதி - சமாதியென்னும் — ஆறு வகையாஞ்சொற்கு - ஆறுபிரிவான பதத்துக்கு — பொருளிதாம் - அருத்தமிதுவாம் — (எ - று) - - - - - *

இ - ங - ச - ம் அநித்தியவஸ்துக்களிவையெனக்கண்டு நித்தியவஸ்துவை யடைதற்கேதுவானகுணங்களேயெசாதனசதுட்டயமாகக்கூறினதாம் (ய)

(அ - கை) அச்சாதனங்களின்றியமையாச் சிறப்பினவெனவு மதனாலுண் டாகும்பயனிஃதெனவுங்கூறுகின்றார்

சாதனமின்றியொன்றைச்சாதிப்பாருலகிலில்லை *
யாதலாலிந்தநான்குமடைந்தவர்க்கறிவுண்டாகு *
நூதனவிவேகியுள்ளினுழையாது நுழையுமாகிற் *
பூதசென்மங்கள்கோடிபுனிதனும்புருடனுமே. *

(இ - ள்) சாதனமின்றி - சாதனமில்லாமல் — ஒன்றை - ஒருகாரியத் தை — சாதிப்பார் - சாதிப்பவர்கள் — உலகிலில்லை - பூமியின்கணில்லை — ஆதலால் - ஆகையால் — இந்தநான்கும் - இச்சாதனசதுட்டயங்களை — அடைந்தவர்க்கு - பெற்றவர்களுக்கு — அறிவுண்டாகும் - ஞானோதயமா ம் — நூதனவிவேகியுள்ளில் - புதியவிவேகியின்மனதில் — நுழையா து - புகாது — நுழையுமாகில் - புகுமானால் — பூத - இறந்தகாலத்துள் ள — சென்மங்கள்கோடி - அனந்தசநநங்களில் — புனிதனும்புருடனு ம் - சித்தசுத்தியுள்ளவனாகியபுமானும் — (எ - று) - - - *

(இ - ம்) மெய்யுணர்வையுணர்தற் கிச்சாதனங்களவசியம்வேண்டுமெ ன்பதாம். .......... (யக)

(அ-கை.) அச்சாதனமுள்ளசீடனது தீவிரதரபக்குவத்தையறிவித்தல்.

இவனதிகாரியானேனிந்திரியங்களாலும் *
புவனதெய்வங்களாலும்பூதபௌதிகங்களாலுந் *
தவனமூன்றடைந்துவெய்யிற்சகித்திடாப்புழுப்போல்வெ *
பவமறுஞானதீர்த்தம்படிந்திடப்பதறினனே [ம்பிப் *

(இ-ள்) இவன் - இச்சாதனசதுட்டயமுள்ளவனே — அதிகாரியானேன் - இந்நூலுக்கதிகாரியாவன் — இந்திரியங்களாலும் - ஆதியாத்மிகத்தினாலும் — புவனதெய்வங்களாலும் - ஆதிதெய்விகத்தினாலும் — பூதபௌதிகங்களாலும் - ஆதிபௌதிகங்களாலும் — தவனமூன்றடைந்து - தாயத்திறையாக்கினியையடைந்து — வெய்யிற்சகித்திடாப்புழுப்போல் - சூரியனதுஷ்ணகிரணத்துக்குச்சகிக்கமாட்டாதகிருமியைப்போல் — வெம்பி - வெப்பமுற்று — பவமறும் - பிறவியையொழிக்கின்ற — ஞானதீர்த்தம்படிந்திட - ஞானசாகரத்தின்மூழ்க — பதறினன் - தீவிரமுற்றான் — (எ-று)

(இ-ம்) தாயத்திறையாக்கினியாகிய சங்சாரதுன்பங்களுக்காற்றாதவனேயவைநீங்கிப்பிரமானந்தமடையவிழைவனென்பதாம் . ..... (யஉ)

(அ-கை) அத்தீவிரதரபக்குவனுக்காசிரியர்தரிசனமாதல்.

ஆனவிம்மனைவிமக்களர்த்தமீடணைகண்மூன்றிற் *
கானவர்வலையிற்பட்டுக்கைதப்பியோடுமான்போற் *
போனவன்வெறுங்கையோடேபோகாதவண்ணஞ்சென்று *
ஞானசற்குருவைக்கண்டுநன்றாகவணங்கினனே. *

(இ-ள்) ஆனவிம்மனைவி - தன்னுக்கானவிவ்வில்லாளும் — மக்கள் - புத்திரரும் — அர்த்தம் - தனமுமாகிய — ஈடணைகண்மூன்றில் - ஈடணாத்திரியங்களினின்றும் — கானவர்வலையிற்பட்டு - வேடர்கள்வீசும்வலைக்குள்ளகப்பட்டு — கைதப்பியோடுமான்போல் - தவறிச்செல்லுமரிணத்தைப்போல — போனவன் - ஓடினவன் — வெறுங்கையோடே - சும்மா — போகாதவண்ணம் - செல்லாதபடி — சென்று - உளத்திலன்பும்புறத்திலாராதனைக்குரியவஸ்துக்களுங்கொண்டுபோய் — ஞானசற்குருவைக்கண்டு - ஞானாசாரியனைத்தரிசனஞ்செய்து — நன்றாக - திரிகரணசுத்தியாக — வணங்கினன் - பூசித்துப்பணிந்தான். — (எ-று.) - - - - *

(இ-ம்.) ஈடணைத்திரியமான துன்பங்களினின்றுநீங்கியவிவனுக்கின்பவடிவமானசற்குருதரிசனமாயிற்றென்பதாம்..... .................... (யங)

(அ-கை.) தரிசனஞ்செய்த அவ்வாசிரியரிடத்திற்செய்யும்விண்ணப்பம்.

வணங்கிநின்றழுதுசொல்வான்மாயவாழ்வெனுஞ்சோகத்தா *
லுணங்கினேனையனேயென்னுள்ளமேகுளிரும்வண்ணம் *
பிணங்கியகோசபாசப்பின்னலைச்சின்னமாக்கி *
யிணங்கியகுருவேயென்னையிரக்ஷிக்கவேண்டுமென்றான். *

(இ-ள்) வணங்கிநின்று-பணிந்தெழுந்துநின்று — அழுதுசொல்வான்-கண்ணீர்சொரியவழுதுரைப்பான் — மாயவாழ்வெனும்-பொய்யானகுடும்பவாழ்க்கையென்னும் — சோகத்தால்-துன்பத்தினால் — உணங்கினேன்-வாடினேன் — ஐயனே-எனதாசிரியரே — என்னுள்ளம்-எனதகம் — குளிரும்வண்ணம்-சீதளமாம்படி — பிணங்கிய-செறிந்திருக்கின்ற — கோசபாசப்பின்னலை-பஞ்சகோசமாகிய பந்தப்பின்னலை — சின்னமாக்கி-தூளாக்கி — இணங்கியகுருவே-முத்தியையடைவிப்பதற்குடன்பட்டிருக்குமாசிரியரே — என்னை-அடியேனை — இரக்ஷிக்கவேண்டுமென்றான்-முத்தியிற்சேர்க்கவேண்டுமென்றுசொன்னான் — (எ-று)

(இ-ம்) அறிவின்மையால்வரும்பவத்துன்பத்தை நீக்கி,யறிவினால்வருமின்பத்தின்மூழ்கும்படி செய்விக்க,வாசிரியனைவேண்டிக்கோடலாம். ௰௪)

(அ-கை) அங்ஙனம்வினவினசீடனைப்பரிசோதித்தல்.

அன்னைதன்சிசுவையையனாமைமீன்பறவைபோலத் *
தன்னகங்கருதிநோக்கித்தடவிச்சந்நிதியிருத்தி *
யுன்னதுபிறவிமாற்றுமுபாயமொன்றுண்டுசொல்வேன் *
சொன்னதுகேட்பாயாகிற்றொடர்பவந்தொலையுமென்றார் *

(இ-ள்) அன்னை-தாயையொத்த — ஐயன்-குருவானவர் — தன்சிசுவை-தன்னுடையசீடனை — ஆமை-கூர்மத்தைப்போல — தன்னகங்கருதி-தனதுளத்தில்நினைத்து — மீன்-மச்சத்தைப்போல — நோக்கி-பூரணதிஷ்டிவைத்து — பறவைபோல-பக்ஷியைப்போல — தடவி-அஸ்தமஸ்தகசையோகஞ்செய்து — சந்நிதியிருத்தி-எதிரிலிருக்கவைத்து — உன்னதுபிறவிமாற்றும்-உனதுபவத்துன்பத்தை நீக்கும் — உபாயமொன்றுண்டு-தந்திரமொன்றிருக்கின்றது — சொல்வேன்-உபதேசிப்பேன் — சொன்னதுகேட்பாயாகில்-போதித்தவண்ணங்கேட்டுநடப்பாயாகில் — தொடர்பவம்-சிருட்டிமுதற்றொடருஞ்சநநமானது — தொலையுமென்றார்-நீங்குமென்றருளினார் — (எ-று) - - - - *

[ப-ம] விஷயத்தை நினைக்குமாகாமியத்தைக் கெடுத்தறிவை யுண

ரும்படிசிந்தித்தாரென்பார்- ஆமைபோற்கருதியெனவும், முன்பந்தப்பட்டிருக்கின்ற சஞ்சிதமொழிந்து தனதுசத்தாமாத்திரமான திருஷ்டிவரும்படிபார்த்தாரென்பார்- மீன்போனோக்கியெனவும், பிராரத்தமாகவந்த பௌதிகவடிவம், நித்தியானந்தமாகவிளங்கத்தனது பூரணானந்தமாகவியாபித்தாரென்பார்-பறவைபோற்றடவியெனவுங், கூறினார் (இ-ம்) சமஸ்காரஞ்செய்த வாசிரியர் உபதேசிப்பதற்காக வசமமதைகளுளவோவில்லவோவெனவாராய்ந்ததாம் ...... ...................................,....... .........(௰௫)

(அ-கை) ஆசிரியர்வசனத்தினமகிழ்ந்தன்புகூர்தல்.

தொடர்பவந்தொலையுமென்றுசொன்னதைக்கேட்டநேரந் ※
தடமடமூழ்கினான்போற்சரீரமுங்குளிர்ந்துள்ளாறி ※
யடருமன்பொழுகுமாபோலானந்தபாஷ்பங்காட்டி ※
மடன்மலர்ப்பாதமீண்டும்வணங்கிநின்றீதுசொல்வான். ※

(இ-ள்) தொடர்பவம்- தொன்றுதொட்டுத் தொடராநின்ற சநநமானது— தொலையுமென்று- நீங்குமென்று— சொன்னதை- அருளியதை— கேட்டநேரம- கேட்டபோதே— தடமடு- விசாலமானதடாகத்தில்— மூழ்கினான்போல்- முழுகினவனைப்போல — சரீரமுங்குளிர்ந்து- தேகமுங்குளிர்ச்சியாய்— உள்ளாறி- மனமுங்குளிர்ந்து — அடருமன்பு- நிறைந்தவன்பானது — ஒழுகுமாபோல்- கரையழித்துச்செல்லுவதுபோல — ஆநந்தபாஷ்பங்காட்டி .. இரண்டுகண்களிலுமாநநதபாஷ்பம்பெருக — மடன்மலர்ப்பாதம் - இதழ்விரிந்த கமலமலர்போன்ற பாதங்களை- மீண்டும்- திரும்பவும்— வணங்கி- பணிந்து— நின்று- எழுந்துநின்று—ஈதுசொல்வான்-இதனைச்சொல்லத்தொடங்குவான்—(எ-று)(௰௬)

(அ-கை) சீடன்விண்ணப்பத்திறைலகமின்றென்பதைக்குறிப்பினாலறிதல்.

சொன்னதுகேட்கமாட்டாத்தொண்டனானாலுஞ்சுவாமி ※
நின்னதுகருணையாலே நீயென்னையாளலாமே ※
யுன்னதுபிறவிமாற்றுமுபாயமொன்றுண்டென்றீரோ ※
யின்னதென்றதைநீர்காட்டியிடேற்றல்வேண்டுமென்றான் ※

(இ-ள்) சொன்னது- போதித்ததை — கேட்கமாட்டா - கேட்டுநடக்கமாட்டாத — தொண்டனானாலும்- அடிமையானாலும் — சுவாமி- என்றெய்வமே — நின்னதுகருணையால்- தேவரீரதுகிருபையினால் — நீயென்னை- தேவரீரடியேனை— ஆளலாமே- தடுத்தாளலாமே— உன்னதுபிறவிமாற்றும்- உனதுபவத்தைக்கெடுக்கும் — உபாயமொன்றுண்டென்

றீரோ - தந்திரமொன்றிருக்கின்றதென்றருள்செய்தீரோ — இன்னதென்று - இத்தன்மையதென்று — அதை - அவ்வுபாயத்தை — நீர்காட்டி - தேவரீர்காண்பித்து — ஈடேற்றல்வேண்டுமென்றான் - இரக்ஷிக்கவேண்டுமென்றான் —(எ-று) - - - - - *

(இ-உ-க-ம்) சீடனறிவுயெவ்வளவு துல்யமானாலுமதன்கண்ணுதயமானவானந்தத்திற்கு விளக்கமாகவஃதைவிளக்குதல்குருதுரியமாதலாற்குருவருளைவிரத்கவேண்டுமென்பதாம்.... ............... ............ .. (௰எ)

(அ-கை.) அகம்பாவமின்றென்பதையறிந்தாத்மஸ்வரூபத்தையுபதேசிக்கத்தொடங்கல்

அடங்கியவிருத்தியானென்றறிந்தபின்செறிந்தமண்ணின் *
குடம்பையுட்புழுமுன்னூதுங்குளவியின்கொள்கைபோலத் *
தொடங்கியகுருவுமான்மசொரூபமேமருவவேண்டி *
யுடம்பினுட்சீவனைப்பார்த்துபதேசமோதுவாரே. *

(இ-ள்) அடங்கியவிருத்தியானென்று - விருத்தியடங்கினவனென்று — அறிந்தபின் - தெரிந்தபின்பு — செறிந்த - நெருங்கிய — மண்ணின்குடம்பையுள் - மட்கூட்டினுள்ளிருக்கின்ற — புழுமுன் - கிருமியின்முன்னே — ஊதுங்குளவியின் - சத்திக்குங்குளவியினது — கொள்கைபோல - தன்மையைப்போல — தொடங்கியகுருவும் - உபதேசிக்கத்தொடங்கிய வாசாரியரும் — ஆன்மசொரூபம் - ஆத்மஸ்வரூபத்தை — மருவவேண்டி - சீடனடையும்பொருட்டு — உடம்பினுள் - தேகத்துள்ளிருக்கும் — சீவனைப்பார்த்து - சீவனைநோக்கி — உபதேசமோதுவார் - உபதேசஞ்செய்வார். —(எ-று.) - - - - - - - *

(இ-ம்) சீடனதுயதார்த்தஸ்வரூபத்தைப்பார்த்தவனஃதாகவிளங்கும்பொருட்டனுக்கிரகிக்கத்தொடங்கினதாம்........................ ..............(௰அ)

(அ-கை) பவத்தைநீக்கும்பொருட்டஃதுண்டானகாரணமுமஃதுநிற்குங்காலவளவையுங்கூறல்.

வாராயென்மகனேதன்னைமறந்தவன்பிறந்திறந்து *
தீராதசுழற்காற்றுற்றசெத்தைபோற்சுற்றிச்சுற்றிப் *
பேராதகாலநேமிப்பிரமையிற்றிரிவன்போத *
மாராயுந்தன்னைத்தானென்றறியுமவ்வளவுந்தானே. *

(இ-ள்) என்மகனே - எனதுபுத்திரனே — வாராய் - கேளாய் — தன்னைமறந்தவன் - தனதாத்மசொரூபத்தைமறந்தவன் — பிறந்திறந்து - சநித்

துமரித்து— தீராதசுழற்காற்றுற்ற- ஓயாதசுழற்காற்றிலகப்பட்ட—செத்தைபோல்- சருகைப்போல— சுற்றிச்சுற்றி- அப்பவத்திற்சுழன்றுசுழன்று— பேராதகாலநேமி- நீங்காதகாலசக்கரத்தினது— பிரமைபிற்றிரிவன்- சுழற்சியிற்சஞ்சரிப்பன் — போதமாராயுந்தன்னை - அறிவினாலாராய்ந்தறியுமாத்மாவை— தானென்று- பிரமமென்று — அறியுமவ்வளவும்- தெரியுமட்டும் — (எ-று) - - - - - *

(இ-ம்) அறிவின்மையாலுண்டானபவமறிவுதயமாய்த்தன்னைத்தானெனவுணருமட்டுமிருக்குமென்பதாம்......... .... ,.............. ..............(௰௬)

(அ-கை) மகாவாக்கியவுபதேசப்பிரகாரம் அறியவேண்டியபொருளிதுவெனவுரைதல்.

தன்னையுந்தனக்காதாரத்தலைவனையுங்கண்டானேற் *
பின்னையத்தலைவன்றானாய்ப்பிரமமாய்ப்பிறப்புத்தீர்வ *
னுன்னைநீயறிவாயாகிலுனக்கொருகேடுமில்லை *
யென்னைநீகேட்கையாலேயீதுபதேசித்தேனே. *

(இ-ள்.) தன்னையும்-கூடஸ்தனையும்—தனக்காதாரத்தலைவனையும்- தனக்கிடமானபிரமத்தையும்— கண்டானேல்- தரிசிப்பானாயின்— பின்னை - பின்பு— அத்தலைவன்றானாய்- அப்பிரமமேகூடஸ்தனாய் —பிரமமாய் - அக்கூடஸ்தனேபிரமமாய்— பிறப்புத்திர்வன்- சநநநீங்குவான்— உன்னைநீயறிவாயாகில்- உனதத்துவிதஸ்வரூபத்தைநீதெரிந்து சொல்வாயானால்—உனக்கொருகேடுமில்லை- உனக்கொருகெடுதியுமில்லை — என்னை- எம்மை— நீகேட்கையால் - நீகேட்கின்றபடியால் — ஈதுபதேசித்தேன்- எனதனுபவமானவிதைச்சொன்னேன் —(எ-று) - - - *

[ப-ம்] நசிப்பதானதேசமுதற்பிரகிருதிபரியந்தம்- ஒவ்வொன்றினுநசியாமற்றானாய்ச்சேடித்திருக்கின்ற பிரத்தியேகாத்ம சைதன்னியத்தைத்தன்னையெனவும், அங்ஙனஞ் சேடித்ததானே அவைகளனைத்தினும் பூரணமானபிரமசைதன்னியமாய்விளங்குவதைத்தலைவனெனவும், அஃதெயிஃதிஃதெயஃதாய்விளங்குஞ் சுத்தசைதன்னியந்தானாகுவதை - பின்னையத்தலைவன்றானாய்ப் பிரமமாயெனவும், அங்ஙனம்விளங்கியவனுபவத்திற்குதயாஸ்தமன மின்மையாற் சநநமரணமின்றென்பதை - பிறப்புத்தீர்வனெனவுங்கூறினார் ........................................ .... ........................... (௨௰)

(அ-கை) தன்னையறியவேண்டுமென்பதைச்சர்வத்திரசாதாரணமாகச்சொல்லுந்தேசமெனக்கருதியஃதையறிந்தவர்கள்பவநீங்காமையானஃதினுண்மையையுணரவினாதல்.

என்னைத்தானசடனுகவெண்ணியோசொன்னீரையா *
தன்னைத்தானறியாமாந்தர்தரணியிலொருவருண்டோ *
பின்னைத்தானவர்களெல்லாம்பிறந்திறந்துழலுவானே *
னின்னைத்தானம்பினேற்கு நிண்ணயமருளுவீரே. *

(இ-ள்) என்னைத்தானசடனுக - என்னையானறியாதவனுக — எண்ணியோ சொன்னீர் - கருதியாசொன்னீர் — ஐயா - எனதாசிரியரே — தன்னைத்தான றியாமாந்தர் - தன்னைத்தெரியாதமனிதர் — தரணியிலொருவருண்டோ - பூமியின்கணொருவருளரோ — பின்னை - பின்பு — அவர்களெல்லாம் - அவர்களனைவரும் — பிறந்திறந்துழலுவானேன் - சநநமரணத்திற்சுழலுவானேன் — நின்னை - தேவரீரை — நம்பினேற்கு - நம்பினவடியேனுக்கு — நிண்ணயமருளுவீர் - நிச்சயத்தைச்சொல்வீர். —(எ-று) - - *

[ப-ம்] ஆசிரியர்தனதனுபவப்படிதேகத்திற்றுனயிருந்ததன்னையறிய வேண்டுமென்னவஃதனுபவமாகாதசீடன்றேகமேதானெனக்கருதி யெ ன்னையானறியவில்லையாவென்றெனன்பார் - என்னைத்தானசடனுகவெண் ணியோசொன்னீரெனவும், இங்ஙனமறிந்தயாவர்க்குஞ்சநநமரணமேனீ ங்கவில்லையென்பானெனன்பார் - பின்னைத்தானவர்களெல்லாம் பிறந்திறந் துழலுவானேனெனவும், தானென்பதிஃதெனவுண்மையாகத்தெரிவிக்க வேண்டுமென்பானென்பார் - நிண்ணயமருளுவீரெனவும், கூறினர். [இ-ம்] தானென்பதனுபவமாகும்பொருட்டதனியல்பை விசாரித்ததாம். ................................................................. (உ௧)

(அ-கை) தானென்பதிஃதெனக்கூறியுந்தோன்றாததற்காகவாசிரியர்வரு த்தமுற்றிரங்குதல்.

இன்னதுதேகந்தேகியிவனெனவுணர்வன்யாவ *
னன்னவன்றன்னைத்தானென்றறிந்தவனுகுமென்றூர் *
சொன்னபின்றேகியாரித்தூலமல்லாமலென்றுன். *
பின்னதுகேட்டவையர்பீடையுநகையுங்கொண்டார். *

(இ-ள்) தேகம் - சரீரமானது — இன்னது - இத்தன்மையுள்ளது — தே கி - சரீரி — இவனென - இத்தன்மையுள்ளவனென்று — உணர்வன்யாவ ன் - அறிகின்றவனெவனே — அன்னவன் - அவன் — தன்னை - கூடஸ்த னை — தானென்று - பிரமமென்று — அறிந்தவனுகுமென்றூர் - தெரிந்தவ னுவனென்றூர் — சொன்னபின் - அங்ஙனம்போதித்தபின்பு — இத்தூ லமல்லாமல் - இச்சரீரமன்றி — தேகியாரென்றுன் - சரீரியாரென்றுகேட் டான் — பின் - பின்பு — அது - அவனனுபவத்தை — கேட்டவையர் - கே

ட்டவாசாரியர்— பீடையும்- துன்பமும்— நகையும்- புன்னகையும்— கொண்டார்- கொண்டனர்.— (எ-று) - - - *

[ப-ம்] இத்தேகந்தானுயிருப்பவனே யெங்ஙனமுய்வேஞ்சலாமென வாலோசிக்குமனவருத்தமும், தேகந்தானெனவறிந்தவன் றேகியையுந் தானென்றறிவனென் னுமகிழ்ச்சியுங்கொண்டானென்பார்- பீடையுநகையுங் கொண்டானெனக்கூறினர். [இ-ம்] ஆசிரியர் தனதனுபவமானசுத்தசைதன்னியத்தைத்தானெனக்கூறச் சீடன் றனக்கனுபவமானதேகந்தானன்றித்தான்வேறுளதோவென்வினுவினதாம். ........... ... ......... ... ........(உஉ)

(அ-கை.) தேகந்தானன்றதன்கண்ணுள்ளதேகியேதானென்பதுதனக்குத் தானேதோன்ற அவத்தாத்திரியங்களையறிகின்றவன்யாரென வாசிரியர்வினுதல்.

தேகமல்லாமல்வேறேதேகியார்காணேனென்றாய் *
மோகமாங்கனவில்வந்துமூளேத்திடுமவனார்சொல்லாய் *
சோகமாங்கனவுதோன்றாச்சுழுத்திகண்டவனார்சொல்லா *
யாகநீநனவிலெண்ணுமறிவுதானேதுசொல்லாய் *

(இ-ள்) தேகமல்லாமல்- சரீரத்தையன்றி— வேறே- வேறாயுள்ள— தேகியார்- சரீரியார்— காணேனென்றாய்- யான்கண்டிலேனென்றாய் —அங்ஙனமாயின்- மோகமாம்- மோகமாகிய — கனவில்வந்துமூளேத்திடுமவனார்- சொற்பனத்திலுதித்தவன்யாவன்— சொல்லாய்- இதனைநீசொல் — சோகமாங்கனவுதோன்றா-மயக்கமாகியசொர்ப்பனந்தோற்றாத—சுழுத்திகண்டவனார்-சுழுத்தியிற்சூனியமாகத்தரிசித்தவனார்—சொல்லாய்-சொல்வாய்— ஆக- ஆகியவிவ்விரண்டையும்— நீநனவிலெண்ணும்-சாக்கிரத்தினினைக்கும்—அறிவுதானேதுசொல்லாய்-அறிவுயாதுசொல் —(எ-று)

(இ-ம்) தேகத்தைத்தவிரதேகியொருவனுளனென்பது தோன்றவினுவினதாம் .... ......... .... ... ......... ............... .... ... ................. (உ௩)

(அ-கை) தேகத்தின்சன்னவத்தைகளையறிகின்ற தேகியொருவனுளனெனத்தோன்றுகின்றதுஅதனைவிளக்கவேண்டுமெனல்

நனவுகண்டதுநான்கண்டநனவுளநினைவுநீங்கிக் *
கனவுகண்டதுமிரண்டுங்காணுதசுழுத்திகண்டுந் *
தினமனுபவித்தலொக்குந்தெரியவுமில்லைசற்றே *
மனதினிலுதிக்கும்பின்னைமறைக்குமதருளுவீரே. *

(இ-ள்) நனவுகண்டதும்- சாக்கிராவத்தையிற்பார்த்ததும்— நான்கண்ட-யான்பார்த்த — நனவுளநினைவுநீங்கி - சாக்கிரத்திலுள்ளநினைப்புநீங்

கி — கனவுகண்டதும் - சொர்ப்பனத்திற்பார்த்ததும் — இரண்டுங்கா ணுத - இவ்விருவவத்தைகளின்குறிப்பின்றிய — சுழுத்திகண்டும் - சுழுத்தியிற்சூனியத்தைப்பார்த்ததும்— தினமனுபவித்தல் - நாடோறுமனுபவிப்பதனுல்— ஒக்கும் - தேவரீர்தேகியொன்றிருக்கின்றுனென்றருளியதொவ்வும்— தெரிபவுமில்லை - அதுபிரத்தியக்ஷமாசவுமில்லை —சற்றேமனதினிலுதிக்கும் - சற்றுமனதிற்றோற்றுகின்றது— பின்னைமறைக்கும் - பின்புமறைகின்றது — அது - அஃதின்ஸ்வரூபத்தை — அருளுவீர் - கிருபைசெய்வீர் — (எ-று.) கண்டதென்பது - கண்டுமெனவும், மறையுமென்பது - மறைக்குமெனவுந்திரிந்துநின்றன - - *

[இ-ம்] தானென்பதுதேகமன்று தேகியெனவவத்தைகளைமுன்னிட்டறிவித்தவொருவாற்றுனறிந்த சீடனஃதுமின்மினிபோலத் தோற்றிமறைதலினதன் யதார்த்தஸ்வரூபமிஃதெனவிளங்கவனுக்கிரகிக்கவேண்டிக்கோடலாம்.. ........................................................................(உச)

(அ-கை )முன்றேகந்தானுயிருந்தவனைக் கிஞ்சித்துவிலக்ஷணப்படுத்திப்பின்றடத்தவிலக்கணையான்முன்புசடமானதேகவிலக்கணங்கூறியஃதைநீக்கிப்பின்சித்தேதானுனதேகியிலக்சணங்கூறத்தொடங்கல்.

தாலத்தின்மரங்கள்காட்டித்தனிப்பிறைகாட்டுவார்போ *
லாலத்தினுடுக்கள்காட்டியருந்ததிகாட்டுவார்போற் *
றூலத்தைமுன்புகாட்டிச்சூக்குமசொரூபமான *
மூலத்தைப்பின்புகாட்டமுனிவரர்தொடங்கினுர். *

(இ-ள் ) தாலத்தின் - பூமியின்கணுள்ள— மரங்கள்காட்டி - தருக்களைக்காண்பித்து—தனிப்பிறைகாட்டுவார்போல் - தனியானமூன்றும்பிறையைத்தரிசிப்பிப்பவர்போல — ஆலத்தினுடுக்கள்சாட்டி - ஆகாயத்தின்கணுள்ளதாரகைகளைக்காட்டி—அருந்ததிகாட்டுவார்போல் - அருந்ததியைக்காண்பிப்பவர்போல— தூலத்தைமுன்புகாட்டி - தூலமாயுள்ளதத்துவங்களைமுன்னேதரிசிப்பித்து — சூக்குமசொருபமான - அணுவுக்கணுவான — மூலத்தை - காரணத்தை— பின்புகாட்ட - பின்றரிசிப்பிக்க —முனிவரர்தொடங்கினுர் - ஆசிரியராரம்பித்தார் — (எ-று ) ஆலமென்பது, ஆகுபெயர் - - - - - - - *

[இ-ம்.] போதமாகும்படிபோதிக்குமரபுகூறினதாம்..........(உரு)

(அ-கை.) தானுகியசித்தைத்தனியே தரிசிப்பிக்குநிமித்தந்தன்னைச்சசிவபரமாகததே ற்றுவிக்குமாரோபயுத்தியையும் அத்துவிதமானகூடல்ஸ்திபிரமமாகத்தோற்றுவிக்குமபவாதயுத்தியையுங்கூறத்தொடங்கல்.

அத்தியாரோபமென்றுமபவாதமென்றுஞ்சொல்லு *
முத்தியாற்பந்தம்வீடென்றுரைக்கும்வேதாந்தமெல்லா *
மித்தையாமாரோபத்தாற்பந்தமாமபவாதத்தான் *
முத்தியாமிவ்விரண்டின்முந்தியாரோபங்கேளாய் *

(இ-ள்) அத்தியாரோபமென்றும் - அத்தியாரோபமென்றுசொல்லும் — முத்தியாற்பந்தம் - சொல்லுகின்றவுத்தியினாற்பந்தமெனவும் — அபவாதமென்றுஞ்சொல்லுமுத்தியால் - அபவாதமென்றுசொல்லுகின்றவுத்தியினால் — வீடென்றும் - வீடெனவும் — வேதாந்தமெல்லாம் - உபநிடதமனைத்தும் — உரைக்கும் - சொல்லும் — ஆதலால் - மித்தையாமாரோபத்தால் - இல்லாதவாரோபத்தால் — பந்தமாம் - பெத்தமாம் — அபவாதத்தால் - அபவாதத்தினால் — முத்தியாம் - வீடாம் — இவ்விரண்டில் - இவ்விருவகையில் — முந்தியாரோபங்கேளாய் - முன்பாரோபத்தைக்கேட்பாய் — (எ-று)

[இ-ம்] அத்தியாரோபவபவாதவிலக்கணங்கூறினதாம். ......... (௨௬)

(அ-கை) அத்தியாரோபவிலக்கணத்தைத்திஷ்டாந்தரூபமாகக் கூறுதல்.

ஆரோபமத்தியாசங்கற்பனையாவவெல்லா *
மோரோர்வஸ்துவினைவேறேயோரோர்வஸ்துவெனவோர்த *
னாருடுபணியாத்தோன்றனரனாகத்தறியிற்றோன்ற *
னீருடுசானற்றோன்றனிரந்தரம்வெளியிற்றோன்றல். *

(இ-ள்) ஆரோபம் - ஆரோபமென்றும் — அத்தியாசம் - அத்தியாசமென்றும் — கற்பனை - கற்பனையென்றும் — ஆவவெல்லாம் - ஆவனவனைத்தும் — ஓரோர்வஸ்துவினை - ஒவ்வொருபொருளை — வேறே - வேறான — ஓரோர்வஸ்துவென - ஒவ்வொருபொருளென — ஓர்தல் - அறிதலாம் — நாருடு - பழுதையினிடத்து — பணியாத்தோன்றல் - சர்ப்பந்தோற்றுதல் — தறியில் - கட்டையினிடத்து — நரனாகத்தோன்றல் - மகனாகத்தோற்றுதல் — கானலூடு - கானலினிடத்து — நீர்தோன்றல் - சலந்தோற்றுதல் — வெளியில் - ஆகாயத்தினிடத்தில் — நிரந்தரந்தோன்றல் - தரமின்மைதோற்றுதலும் —(எ-று) ..... ....................................... ...... ...(௨௭)

(அ-கை) முற்கூறியதிஷ்டாந்தம்போலச்சுத்தசைதன்னியத்திற்சகசீவபரந்தோற்றுமெனல்

இப்படிப்போலநாமரூபங்களிரண்டுமின்றி *
யொப்பமாயிரண்டற்றொன்றாயுணர்வொளிநிறைவாய்நிற்கு *
மப்பிரமத்திற்றோன்றுமைமபூதவிகாரமெல்லாஞ் *
செப்பியகற்பிதத்தாற்செனித்தவென்றறிந்துகொள்ளே *

(இ-ள்) இப்படிப்போல- இவைபோல— நாமரூபங்களிரண்டுமின்றி- நாமரூபமான விருதன்மைகளின்றி — ஒப்பமாய்- ஒற்றுமையாயும் — இரண்டற்றொன்றாய்- துவிதமின்றியேகமாகியும்— உணர்வொளிநிறைவாய்- ஞானப்பிரகாசநிறைவாயும்— நிற்கும்- இருக்கின்ற— அப்பிரமத்திற்றோன்றும்- அப்பிரமத்திற்றோற்றநின்ற— ஐம்பூதவிகாரமெல்லாம்- பஞ்சபூதமுதலியவேறுபாடனைத்தும்— செப்பிய- சொல்லாநின்ற— கற்பிதத்தால்- ஆரோபதத்தால்— ஜெனித்தவென்று- உண்டானவைகளென்று— அறிந்துகொள்- தெரிவாய்— (எ-று) - .. *

(இ-உ-க-ம்) உள்ளதான சத்திலில்லாததானசகசீவபரந்தோன்றுமுறைமையிங்ஙனமெனக்கூறினதாம்.... .................. .... ... (உஅ)

(அ-கை) பிரமத்திற்கற்பிதமாகச் சீவேஸ்வரசகத்துண்டானமுறையையிருவகையாகக்கூறத்தொடங்கிமுன்னமொருவகையைக்கூறுகின்றார்.

அதுதானெப்படியென்றக்காலநாதியாஞ்சீவரெல்லாம் *
பொதுவானசுழுத்திபோலப்பொருந்துமவ்வியத்தந்தன்னி *
லிதுகாலதத்துவப்பேரீசனுட்பார்வையாலே *
முதுமூலசுபாவம்விட்டுமுக்குணவியத்தமாமே *

(இ-ள்) அதுதானெப்படியென்றக்கால்- அக்கற்பனையெப்படியுண்டாயிற்றெனின்— அநாதியாஞ்சீவரெல்லாம்- சித்ரூபமானசீவர்களனைவரும்— பொதுவானசுழுத்திபோல- சாதாரணமானசுழுத்தியைப்போற்சூனியமாயிருக்கின்ற— அவ்வியத்தந்தன்னில்- மூலப்பிரகிருதியில்— பொருந்தும்- அமையும்— இது- இவ்வவ்வியத்தம்— காலதத்துவப்பேர்- நாமங்காலதத்துவமாம்— ஈசனுட்பார்வையால்- ஈஸ்வரசமுகத்தினால்— முதுமூலசுபாவம்விட்டு- முதன்மையானபிரகிருதியினின்று நீங்கி— முக்குணவியத்தமாம்- மூன்றுகுணங்களும்வெளிப்படும்— (எ-று) (உகூ)

(அ-கை) முக்குணவியல்புகூறல்

உத்தமவெளுப்புநீலமுபயமாஞ்சிவப்புமாகுஞ் *
சுத்தசத்துவந்தமத்தோடசுத்தசத்துவப்பேர்சொல்லுஞ் *
சத்துவமுக்கிருட்டாச்சாற்றுமுக்குணமுமூன்று *
மொத்துளவெனினுந்தம்முளொருகுணமதிகமாமே *

(இ-ள்) உத்தமவெளுப்பு- முதலானவெண்ணிறமும்— உபயமாஞ்சிவப்பும்- இரண்டாவதானசெம்மைநிறமும்— நீலம்- மூன்றாவதானகருநிறமும்— ஆகும்- ஆகாநின்ற— சுத்தசத்துவம்- தூய்தானசத்துவகுணமும்— அசுத்தசத்துவம்- ரசோகுணமும்— தமத்தோடு- தமோகுணமுமென— பேர்சொல்லும்- நாமங்கூறப்பெறும்— சத்துவம்- சத்துவ

மானசுத்தமும்— அழுக்கு- அழுக்கும் — இருட்டா- இருட்டுமாக— சாற்றும- சொல்லப்பட்ட—முக்குணமும்- இம்மூன்றுகுணங்களும்— மூன்றுயொத்துளவெனினும் - மூன்றாகி யொத்திருப்பவைகளாயினும்— தம்முள்- அவைகளுள்— ஒருகுணமதிகமாம் - இரண்டடங்கிபொருகுணம்விசேடித்துநிற்கும் — (எ-று) - - - ❊

(இ-உ-த-ம்) வித்தைவடிவமானசீவர்கள்பர்தப்பட்டிருக்குந்தங்கண்மறதியானவவ்வியத்தத்திற் காலதத்துவமுமுக்குணங்களும் வியத்தமாயினவென்பதாம் ....... ....... .. .............. ........... ............. ..... ..... .....(கூ)

(அ-கை) மற்றொருவகைசிருட்டியின்மரபுகூறததொடங்கல்

ஒருவழியிதுவாமித்தையொருவழிவேறுச்சொல்வார் ❊
மருவுமவ்வியத்தந்தானேமகதத்துவமாகுமென்று ❊
மருண்மசதத்துவந்தானகங்காரமாகுமென்றுங் ❊
கருவகங்காரமூன்றுய்க்காட்டியகுணமாமென்றும் ❊

(இ-ள்) ஒருவழியிதுவாம்-ஒருமார்க்கமிதுவாம்—இத்தை- இதையே— ஒருவழிவேறுச்சொல்வார்- மற்றொருமார்க்கமாகச்சொல்லுவார்கள் — அஃதெங்ஙனமெனின்—மருவுமவ்வியத்தந்தானே-பொருந்தியவவ்வியத்தமே—மகதத்துவமாகுமென்றும்- மகதத்துவமாமெனவும்—அருண்மசதத்துவந்தான்- சொல்லியமகதத்துவமே— அகங்காரமாகுமென்றும்- அகங்காரதத்துவமாமெனவும் — கருவகங்காரம் - கருவாகியவகங்காரமே— மூன்றுய்க்காட்டியகுணமாமென்றும்- மூன்றாத்தெரிவித்தகுணங்களாமெனவுஞ்சொல்லப்படும்— (எ-று) - - - ❊

சுத்தசைதன்னியமானதன்னையெதிரிட்டடியவுதயமானவறிவுக்குமுன்புண்டானமறதியே- அவ்வியத்தமானபிரகிருதியெனவும்- அவ்வறிவுடனிர்முகவுன்முகமானவிடமே- மகதத்துவமெனவும்- அஃதுதன்னிடத்துப்பிரதிபலனமான ஆரோபத்தைநானெனன்பதே- அகங்காரதத்துவமெனவும்- அதனிர்ச்சலமே- சத்துவமெனவும்- அதன்சலனமே- ரசமெனவும்- அதன்மக்கினமே- தமமெனவுமுண்டானவுகயர்ச்சிருட்டியைத்தனதனுபவத்திற்காண்க ......... .... ... .... ........................ ........................ .....(கக)

(அ-கை) மேற்கூறியகுணங்களிற் சகசீவபரவுற்பத்தியைக்கூறுவான்றொடங்கிமுன்னர்பரனுற்பத்தியைக்கூறுகின்றார்

இக்குணங்களிலேவிண்போன்றிருக்குஞ்சிற்சாயைதோன்று ❊
முக்குணங்களினுந்தூய்தாமுதற்குணமரயையாகு ❊
மக்குணம்பிரமச்சாயையந்தரியாமிமாயை ❊
யெக்குணங்களும்பற்றுதோனிமித்தகாரணமாமீசன் ❊

(இ-ள்) இச்குணங்களில் - இம்மூன்றுகுணங்களில்— விண்போன்று - ஆகாயம்போல—இருக்கும் - நிரவயமாயிருக்கின்ற— சிற்சாயைதோன்றும் - சிற்சாயைப்பிரதிபலிக்கும் — முக்குணங்களினும் - மூன்றுகுணங்களினும்— தூய்தாமுதற்குணம் - சுத்தமாகியசத்துவகுணம்—மாயையாகும் - மாயையாம்— அக்குணம் - அந்தச்சத்துவத்திற்பிரதிபலித்த— பிரமச்சாயை - பிரமப்பிரதிபலனமே — அந்தரியாமி - அந்தரியாமியாம்— மாயையெக்குணங்களும் - மாயாசம்பந்தமானவெந்தக்குணங்களும்— பற்றுதோன் - பற்றுதவனே— நிமித்தகரரணமாமீசன் - பாஞ்சபூதபவுதிசமுதலியசிருட்டிக்குநிமித்தகாரணமாகியவீசனும் —(எ-று) ........(௩உ)

(அ-கை) ஈசன்காரணசரீர வுற்பத்தியையுஞ்சீவனுற்பத்தியையுங்கூறல்.

ஈசனுக்கிதுசுழூத்தியிதுவேகாரணசரீரங் *
கோசமானந்தமாகுங்குணமிராச்தமவித்தைத் *
தேசறுமவித்தைதோறுஞ்சிற்சாயைசீவகோடி *
நாசமாமுயிர்க்கப்போதுநாமமும்பிராஞ்ஞனுமே *

(இ-ள்)ஈசனுக்கு - இவ்விஸ்வரனுக்கு— இது - இமமாயையே—சுழுத்தி - சுழுத்தியவத்தையாம்— இதுவே - இஃதே — காரணசரீரம் - காரணசரீரமாம் — கோசமானந்தமாகும் - இதுவேயானந்தமயகோசமாம்— குணமிராசதம் - ரசோகுணம் — அவித்தை - அவித்தையாம்—தேசறுமவித்தைதோறும் - விளக்கமின்றியவவித்தைகடோறும்பிரதிபலித்த—சிற்சாயை - ஞானப்பிரதிபலினமே—சீவகோடி - சீவராசிகளாம்— நாசமாம் - யாவையுமிறந்தசுழுத்தியை யபிமானிக்கும்— உயிர்க்கு - சீவர்களுக்கு— அப்போது - அவ்வவசரத்தில்—நாமமும்பிராஞ்ஞனும் - பெயர்பிராஞ்ஞனும் —(எ-று)..... .... ................................................... ..........(௩௩)

(அ-கை)சீவனதுகாரணசரீரவுற்பத்தியைக்கூறுகின்றார்.

அழுக்கொடுபெற்றுஞ்சீவர்க்கதுவேயானந்தகோசஞ் *
சுழுத்திகாரணசரீரஞ்சொன்னவிம்மட்டுமோக *
முழுக்குணத்திரண்டால்வந்தமூலவாரோபஞ்சொன்னோம் *
வழுத்துசூக்குமவாரோயவழியுநீமொழியக்கேளாய் *

(இ-ள்) அழுக்கொடுபெற்றும் - அவித்தையைச்சேர்ந்திருக்கின்ற— சீவர்க்கு - சீவர்களுக்கு — அதுவே - அவ்வவித்தையே— ஆநந்தகோசம் - ஆநந்தமயகோசமாம்— சுழுத்தி - அஃதேசுழுத்தியவத்தையாம்— காரணசரீரம் - அஃதேகாரணசரீரமாம்—சொன்னவிம்மட்டும் - சொல்லியவிதுபரியந்தம— மோகம் - மயக்கமாகத்தோற்றியபிரகிருதியின் —முழுக்கு

ணத்திரண்டால்வந்த - முழுதுமானசத்துவரசோகுணத்திலுண்டான — மூலவாரோபம் - காரணசரீரவத்தியாசத்தை — சொன்னோம் - உரைத்தோம் — வழுத்துசூக்குமவாரோபவழியும் - சொல்லப்பட்டசூக்குமசரீரவத்தியாசமுண்டானமார்க்கத்தையும் — மொழிய - யாஞ்சொல்ல — நீகேளாய் - நீகேட்பாய் — (எ - று) *

சுத்தசைதன்னியச்சாயை - அதிஷ்டானமாதலின் - அதனைபிரமகூடஸ்தரெனவும் - அஃது, சத்துவரசோகுணத்திற்றங்குதலின் - அக்குணங்களைமாயையவித்தையெனவும் - அவற்றிற்பிரதிவிம்பித்தசாயை யாரோபமாதலின் அவற்றைச்சீவேஸ்வரரெனவும் - அம்மாயையவித்தைகள் மேல்விளைவுக்குக்காரணமாதலிற் - அவைகளைக்காரணசரீரமெனவும் - அவைகளிலனைத்துமடங்கிநிற்றலை - சுழுத்தியவத்தையெனவும் - அவைகளிலன்புற்றுநிற்றலை - ஆனந்தமயகோசமெனவும் - அவைகளையபிமானித்துநிற்பவரை - அந்தரியாமிபிராஞ்ஞனெனவுங்கொள்க. (இ - ரு - க - ம்) சீவேஸ்வரவுற்பத்திப் - அவர்களுக்குண்டானகாரணசரீரவத்தியாசமுங்கூறினதாம்..... (ருச)

(அ - ஙக) சீவேஸ்வரர்களுக்குச்சூட்சுமசரீரமுண்டானமுறைமையைக்கூறுவான்றொடங்கிமுன்புசத்திகளின்றோற்றமுரைத்தல்.

ஏம்மாயாவிநோதவீசனாருளினாலே *
பூமலியுயிர்கட்கெல்லாமபோகசாதநமுண்டாகத் *
தாமதகுணமிரண்டுசத்தியாய்ப்பிரிநதுதோன்றும். *
வீமமாமூடமென்றும்விவிதமாந்தோற்றமென்றும் *

(இ - ள்) ஏமமாயாவிநோத - மோகமாகியமாயையைவிளையாட்டாகவுடைய — ஈசனாருளினால் - ஈஸ்வரனுடையகிருபையினால் — பூமலியுயிர்கட்கெல்லாம் - பொலிவுமிகுந்தசீவர்களனைவர்க்கும் — போகசாதநமுண்டாக - அநுபோகசாதனமுண்டாகும்பொருட்டு — தாமதகுணம - தமோகுணமானது — வீமமாமூடமென்றும் - பயங்கரமானவாபரணமெனவும் — விவிதமாந்தோற்றமென்றும் - நாநாவிதமாகும்விக்ஷேபமெனவும — இரண்டுசத்தியாய்ப்பிரிந்துதோன்றும - இருசத்திகளாய்ப்பிரிந்துதோன்றும் — (எ - று) உயிர்கட்கெல்லாம்போகசாதனமுண்டாகவென்பதனாற் சீவர்கள்சமஷ்டியேயீஸ்வரனாதலின் - அவ்வீஸ்வரனுக்குங்கொள்க. *

(இ - ம்) தமோகுணப்பிரதிபலநமானசிற்சாயையின் அறிவின்மையாபரணமும - அறிவுவிக்ஷேபமுமெனவிரண்டுசெத்திகளாயினவென்பதாம் ருரு

(அ-கை) விக்ஷேபசத்தியிற்றன்மாத்திரையானசூட்சுமபூதவுற்பத்திகூறல்.

தோற்றமாஞ்சத்திதன்னிற்சொல்லியவிண்ணாம்விண்ணிற் *
காற்றதாங்காற்றிற்றீயாங்கனலினீர்நீரின்மண்ணாம் *
போற்றுமிவ்வைந்துநொய்யபூதங்களென்றும்பேராஞ் *
சாற்றுமற்றிவற்றிற்போகசாதநதனுவுண்டாகும் *

(இ-ள்.) தோற்றமாஞ்சத்திதன்னில் - விக்ஷேபசத்தியில் — சொல்லிய விண்ணாம் - சொல்லப்படுஞ்சத்ததன்மாத்திரையானவாகாயமுண்டாம் — விண்ணில் - அவ்வாகாயத்தில் — காற்றதாம - பரிசதன்மாத்திரையானவாயுவுண்டாம் — காற்றில் - அவ்வாயுவில் — தீயாம் - ரூபதன்மாத்திரையானவக்கினியுண்டாம் — கனலில் - அவ்வக்கினியில் — நீர் - ரசதன்மாத்திரையானவப்புண்டாம் — நீரில் - அவ்வப்பில் — மண்ணாம் - கந்ததன்மாத்திரையானபிருதிவியுண்டாம் — போற்றும் - போற்றப்பட்ட — இவ்வைந்தும் - இத்தன்மாத்திரைகளைந்தும் — நொய்யபூதங்களென்றும்பேராம் - சூக்குமபூதங்களென்றுநாமங்களாம் — சாற்றும - சொல்லப்பட்ட — இவற்றில் - இத்தன்மாத்திரைகளில் — போகசாதநதனுவுண்டாகும் - அனுபோகத்துக்குச்சாதநமானசூக்குமசரீரந்தோன்றும — (எ-று) (கசா)

(அ-கை.) தன்மாத்திரைசத்துவகுணத்தில் அந்தக்கரணஞானேந்திரியவுற்பத்திகூறல்.

ஆதிமுச்குணமிப்பூதமடங்கலுந்தொடர்ந்துநிற்குங் *
கோதில்வெண்குணத்திலைந்துகூறுணர்கருவியாகு *
மோதியபின்னையைந்துமுளம்புந்தியிரண்டாஞானா *
சாதநமாமிவ்வேழுஞ்சற்குணப்பிரிவினாலே. *

(இ-ள்) ஆதிமுக்குணம் - முன்னுண்டானமூன்றுகுணங்களும் — இப்பூதமடங்கலும் - இத்தன்மாத்திரைகளைந்திலும் — தொடர்ந்துநிற்கும் - கூடியிருக்கும் — கோதில் - குற்றமற்ற — வெண்குணத்தில் - சத்துவகுணத்தில் — ஐந்துகூறு - வியஷ்டியானவைந்துபங்கும் — உணர்கருவியாகும் - ஞானேந்திரியங்களாம் — ஓதியபின்னையைந்தும் - சொல்லப்பட்ட சமஷ்டியானவைந்துபங்கும் — உளம்புந்தியிரண்டாம் - மனம்புத்தியெனவிரண்டாகும் — சற்குணப்பிரிவினால் - சத்துவகுணம்சமாதலால் — இவ்வேழும் - இந்தவேழும் — ஞானசாதநமாம் - அறிகருவிகளாம் எ-று (கஎ)

(அ-கை) தன்மாத்திரையின்ரசோகுணத்தில்வாயுகன்மேந்திரியங்களினுற்பத்திகூறல்.

இராசதகுணத்தில்வேறிட்டெடுத்தகூறைந்துமைந்தும் *
பிராணவாயுக்களென்றும்பெருந்தொழிற்கன்மமென்றும் *
பராவியபெயராமிந்தப்பதினேழுமிலிங்கதேகஞ் *
சுராசுரர்நரர்விலங்காய்த்தோன்றுயவுயிர்கட்கெல்லாம் *

(இ-ள்) இராசதகுணத்தில் - ரசோகுணத்தில் — எடுத்தகூறைந்தும் - எடுத்தொன்றுசவைத்தபங்கைந்தும் — பிராணவாயுக்களென்றும் - பிராணதியஞ்சவாயுக்களெனவும் — வேறிட்டெடுத்தகூறைந்தும் - தனித்தனியேயெடுத்தபங்கைந்தும் — பெருந்தொழிற்கன்மமென்றும் - பெரியகிரியையைச்செய்யுங்கன்மேந்திரியங்களெனவும் — பராவியபெயராம் - பரவியநாமங்களாம் — இந்தப்பதினேழும் - இப்பதினேழுதத்துவங்களும் — சுரர் - தேவர்களும் — அசுரர் - அவுணர்களும் — நரர் - மனிதர்களும் — விலங்காய் - மிருகங்களுமாகி — தோன்றிய - உண்டான — உயிர்கட்கெல்லாம் - சீவர்களனைவர்க்கும் — இலிங்கதேகம் - சூக்குமசரீரங்களாம் (எ-று)

சிலநூலாசிரியர்சூட்சுமதேகமிருபத்துநான்கு தத்துவமென்றதை இந்நூலாசிரியர் விடயமைந்தையும் ஞானேந்திரியத்திலடக்கியும் அகங்காரத்தையுஞ் சித்தத்தையு மனம்புத்தியிலடக்கியும் பதினேழாகக் கூறினரெனக்கொள்க. (இ-ரு-க-ம்) சீவேஸ்வரருக்குண்டாணசூக்குமசரீரவத்தியாசங்கூறினதாம்.... .................. ......... ...... ...... ....(ருஅ)

(அ-கை) சூக்குமதேகத்தினுல்வருங்கற்பனு நாமங்களைக்கூறல்.

இவ்வுடன்மருவுஞ்சீவர்க்கிலங்குதைசதனென்றுகு *
மிவ்வுடன்மருவுமீசர்க்கிரணியகருப்பனுகு *
மிவ்வுடலிரண்டுபேர்க்குமிலிங்கசூக்குமசரீர *
மிவ்வுடற்கோசமூன்றுமிதுசனுவவத்தையாமே *

(இ-ள்) இவ்வுடல் - இவ்வியஷ்டிசூக்குமதேகத்தை — மருவுஞ்சீவர்க்கு - சேர்ந்தபிமானிக்குஞ்சீவர்களுக்கு — இலங்குதைசதனென்றுகும் - விளங்காநின்றவபிமானிநாமந்தைசதனென்பதாம் — இவ்வுடல் - இச்சமஷ்டிசூக்குமதேகத்தை — மருவுமீசர்க்கு - சேர்ந்தபிமானிக்கின்றஈஸ்வரனுக்கு — இரணியகருப்பனுகும் - அபிமானிநாமமிரணியகருப்பனென்பதாம் — இவ்வுடல் - இச்சரீரம் — இரண்டுபேர்க்கும் - சீவேஸ்வரரிருவர்க்கும் — இலிங்கசூக்குமசரீரம் - சூக்குமசரீரமாம் — இவ்வுடல் - இச்சரீரத்துக்கு — கோசமூன்றும் - பிராணமயமனோமயவிஞ்ஞானமயமெனக் கோசங்கண்மூன்றுகும் — இதுசனுவவத்தையாம் - இதுசொப்பனுவத்தையாம் — (எ-று)

தன்மாத்திரைகள்சூக்குமமாதலின் - அவற்றைச்சூக்குமபூதமெனவும் அவற்றின்றடிப்படைசூக்குமதேகமெனவும் - அதனைதயபிமானிப்பவர்க

ளை இரணியசுரூப்பன் தைசதனெனவும் - அஃது மனோராச்சியஞ்செய்தலை ச்சொரூபமாவதெனவும் - அஃதுபிராணமனோபுத்திகளாகத் தன்னை மறைத்தலைக்கோசங்களெனவுங்கொள்க ............ .... ............... (ஙக)

(அ-கை) பாஞ்சபூதபௌதிகமான சகத்துற்பத்தியைக்கூறுவான்றொடங்கியஃதுண்டாகுதற்கேதுகூறுகின்றார்.

சூக்குமசகமிம்மட்டுஞ்சொல்லினோமிப்பாற்றூல ※
மாக்குமாரோபந்தானுமடைவினின்மொழியக்கேளாய் ※
தாக்குமிவ்வுயிர்க்குத்தூலதனுவும்போகமுமுண்டாகக் ※
காக்குமிவ்விசன்பஞ்சீகரணங்கள்செய்தான்றனே. ※

(இ-ள்) சூக்குமசகம் - சூக்குமசரீரப்பிரபஞ்சத்தை — இம்மட்டும் - இதுபரியந்தம் — சொல்லினோம் - சொன்னோம — இப்பால் - மேல் — தூலமாக்கும் - தூலபூதமுந்தூலதேகமுமுண்டாக்கும் — ஆரோபந்தானும் - அத்தியாசத்தையும் — அடைவினில் - கிரமமாக — மொழியக்கேளாய் - சொல்லக்கேட்பாய் — தாக்குமிவ்வுயிர்க்கு - சூக்குமசரீரத்திற்சேர்ந்திருக்கின்றவிச்சீவர்களுக்கு — தூலதனுவும் - தூலதேகமும் — போகமும் - அநுபோகமும் — உண்டாக - உண்டாகும்படி — காக்குமிவ்விசன் - சீவர்களைப்பாதுகாக்குமிவ்விஸ்வரன் — பஞ்சீகரணங்கள் - பஞ்சீகரித்தலை — செய்தான் - செய்தனன் — (எ-று) தனுவும்போகமுமென்றவும்மையால் அண்டமும்புவனமுங்கொள்க.......... .......... .... .... .............. (சய)

(அ-கை) பஞ்சீகரணமும் அவற்றினாலாயகாரியமுங்கூறல்.

ஐந்துபூதமும்பத்தாக்கியவையாதிநந்நான்காக்கி ※
நந்துதன்பாதிவிட்டுநாலொடுநாலுங்கூட்ட ※
வந்தனதூலபூதமகாபூதமவற்றினின்றுந் ※
தந்தன நான்காந்தூலதனுவண்டபுவனபோகம். ※

(இ-ள்) ஐந்துபூதமும்பத்தாக்கி - தமோகுணப்பங்காகியசூக்குமபஞ்சபூதங்களைப்பத்துப்பங்குசெய்து — அவையாதி - அவற்றிற்பகுத்தபாதியை — நந்நான்காக்கி - ஒவ்வொன்றைநான்குநான்குசெய்து — நந்துதன்பாதிவிட்டு - கேடில்லாததன்னம்சமான்பாதியைநீக்கி — நாலொடு - மற்றநான்கோடு — நாலுங்கூட்ட - நான்கையுஞ்சேர்க்க — வந்தனதூலபூதம் - தூலபூதமுண்டாயின — மகாபூதமவற்றினின்றும் - தூலபூதமாகியவவைகளினின்று — தந்தன - உண்டாகப்பட்டன — தூலதனு - தூலசரீரமும் — அண்டம் - அண்டமும் — புவனம் - புவனமும் — போகம் - போகங்களுமாகிய — நான்காம - நான்குமாம் — (எ-று.) அண்டமென்பது,

பஞ்சபூதசமஷ்டியெனவும் புவனமென்பது அவைகளினுள்ளபதப்பிராப்த்திஸ்தானங்களெனவுங்கொள்க. - - - - - - ※

(இ-உ-க-ம்) சூட்சுமபூதத்தைபஞ்சீகரிக்கத்தூலபூதமும்அவற்றிற் றூலசரீரமுதலியநான்குந்தோற்றினவென்பதாம்.......................(சக)

(அ-கை) தூலதேகத்தினால்வருங்கற்பனைநாமங்களைக்கூறல்.

தூலமேமருவுஞ்சீவன்சொல்லியவிசுவனாகுந் ※
தூலமேமருவுமீசன் சூழ்விராட்புருடனாகுந் ※
தூலஞ்சாக்கிரவவத்தைசொன்னதோரன்னகோசந் ※
தூலகற்பனையிதென்றுதொகுத்தது மனத்திற்கொள்வாய் ※

(இ-ள்) தூலமேமருவுஞ்சீவன்- வியஷ்டிதூலதேகத்தைச்சேர்ந்தபிமானிக்கின்றசீவனுக்கபிமானிநாமம்—சொல்லிய-சொல்லப்பட்ட—விசுவனாகும்-விசுவனென்பதாம்—தூலமேமருவுமீசன்-சமஷ்டிதூலதேகத்தைச்சேர்ந்தபிமானிக்கின்றவீஸ்வரனுக்கபிமானிநாமம்— சூழ்விராட்புருடனாகும்-சருதாநின்றவிராட்புருடனென்பதாம்— தூலம்- இவையிருவர்க்குந் தூலதேகமாம்—சாக்கிரவவத்தை- இவையிவ்விருவர்க்குஞ்சாக்கிரவவத்தையாம் — சொன்னது - சொல்லியவிது — அன்னகோசம்- இவ்விருவர்க்குமன்னமயகோசமாம்— தூலகற்பனையிதென்று- தூலசரீரவத்தியாசமிதுவென்று—தொகுத்தது - தொகுத்துச்சொன்னதை—மனத்திற்கொள்வாய்- மனதிலுணர்வாய் —(எ-று) - - - ※

தன்மாத்திரைமிசிரமானதை தூலபூதமெனவும் - அஃதோருருவமானதை தூலசரீரமெனவும் - அஃதை அபிமானிப்பவர்களை விசுவன்- விராட்டெனவும்- அதினின்றுயெதிரிட்டறிதலை - சாக்கிராவவத்தையெனவும்- அஃதன்னமயமாதலின் - அதனை அன்னமயகோசமெனவுங் கொள்க [இ-ம்] அபிமானநாமமுதலியவைகளுண்டானவத்தியாசங்கூறினதாம் . ......................(சஉ)

(அ-கை) சீவேஸ்வரர்களுக்குபாதியொன்றாயினவர்கள்பேதமறிவதெங்ஙனமென்றவினாவுக்குத்தரம்.

சீரியவீசனுக்குஞ்சீவர்க்குமுபாதியொன்றே ※
லாரியகுருவேபேதமறிவதெப்படியென்றக்காற் ※
காரியவுபாதிசீவன்காரணவுபாதியீசன் ※
வீரியமிகுசமட்டிவியட்டியாற்பேதமாமே. ※

(இ-ள்.) சீரியவீசனுர்க்கும் - சிறப்பையுடையவீஸ்வரனுக்கும் — சீவர்க்கும்- சிவனுக்கும் — உபாதியொன்றேல்- உபாதியொன்றானல் — ஆரியகுருவே- அறிவுருவானவாசிரியரோ — பேதமறிவது- சீவேஸ்வரரொன்றின்றவேற்றுமையறிவது— எப்படியென்றக்கால்- எவ்வாறென்பாயாகில்— காரியவுபாதி- காரியோபாதியுள்ள — சீவன்- சீவர்கள் — வியட்டியால்- வியட்டியினுலும்— காரணவுபாதி- காரணேபாதியுள்ள— ஈசன்- ஈஸ்வரன்— விரியமிகுசமட்டி- விரமிகுந்தசமட்டியினுலும்— பேதமாம்- பேதமாகும் — (எ-று)......................................(சரு)

(அ-கை) (இ-து)

மரங்கள்போல்வியட்டிபேதம்வனமெனல்சமட்டிபேதஞ் *
சரங்கடாபரங்கள்பேதந்தனியுடல்வியட்டியென்பார் *
பரம்பியவெல்லாங்கூட்டிப்பார்ப்பதுசமட்டியென்பா *
ரிரங்கியபலசீவர்க்குமீசர்க்கும்பேதமீதே. *

(இ-ள்.) மரங்கள்போல்- தருக்களைப்போல — வியட்டிபேதம்- வியட்டியின்பேதமாம்— வனமெனல்- வனமென்பது— சமட்டிபேதம்-சமட்டியின்பேதமாம்—சரங்கடாபரங்கள்-சராசரவுயிர்களின்— பேதம்-பேதமான — தனியுடல்- தனிமையானதேகத்தை — வியட்டியென்பார்- வியட்டியென்றுசொல்லுவார்கள் — பரம்பியவெல்லாங்கூட்டி- விரிந்ததுலதேகமுதலிய வனைத்தையுஞ்சேர்த்து — பார்ப்பதுசமட்டியென்பார் - காண்பதுசமட்டியென்றுசொல்லுவார்கள் — இரங்கிய - இரங்காநின்ற— பலசீவர்க்கும்- அநந்தசீவர்களுக்கும்— ஈசர்க்கும் - ஈஸ்வரனுக்கும்— பேதமீதே- பேதமிதுவாம் — (எ-று) *

(இ-உ-க-ம்) சமட்டியினலீஸ்வரனுக்குச்காரணேபாதியும்-வியட்டியினற்சீவனுக்குக்காரியோபாதியுமாமென்பதாம் (சச)

(அ-கை) அத்தியாரோபவுத்தியினற் றன்னிடத்திலாரோபமாகத் தோற்றினசகசீவபரங்களைக்கூறியவைகளுண்டானகிரமப்படிலயிப்பிக்குமபவாதவுத்தியைக்கூறத்தொடங்கல்

கற்பனைவந்தவாறுகாட்டினேங்காண்பவெல்லாஞ் *
சொற்பனம்போலவெண்ணித்துணிந்தவன்ஞானியாவன் *
செற்புதைமனழக்காலம்போய்த்தெளிந்தவாகாயம்போல *
வற்புதமுத்திசேருமபவாதவழியுங்கேளாய். *

(இ-ள்.) கற்பனைவந்தவாறு - ஆரோபமான சிருட்டியுண்டானமுறையை— காட்டினேம்- அறிவித்தோம்— காண்பவெல்லாம்- திரிசியமனை

டில்லை - துவிதமில்லை — ஒருபொருளை - ஏகவஸ்துவை — சொல்லுஞ்சொற்கள் - உரைக்கும்வசனங்கள் — பின்னபதமாம் - வெவ்வேறுசொற்களாம் — அதனால் - ஆதலினாலே — சத்தாதிகுணம் - சச்சிதானந்தமென்னுங்குணப்பதங்கட்கு — பிரமமேகம் - பிரமமொன்றேபொருளாம் — அன்ன - அத்தன்மையதான — பொருளொருமையறிந்து - அருத்தத்தினொருமையைத்தெரிந்து — அகண்டபரிபூரணமாய் - அகண்டமானபூரணஸ்வரூபமாக — ஆவாய்நீ - நீயாகுவாய் — (எ - று) - - - *

[இ - ரு - க - ம்] இவ்விதிவிலக்குநாமங்கள்பலவாயினுமதனாலுணர்த்தப்படும்பொருளொன்றாதல்போலச்சச்சிதானந்தமென்னும்பதங்கண்மூன்றாயினுமஃதுணர்த்தப்படும் பொருளொன்றானவத்துவிதவஸ்துவேயாம்........................ ... .... .. ..................... . ............... (௱௩அ)

(அ - கை) குணாதீதமானவஸ்துவிற்குக்குணங்கூறலாமோவென்பதற்குத்தரங்கூறல்

நிர்க்குணவஸ்துவின்குணங்களுரைப்பதுதாய்மலடியென *
விகலொன்றதே, சற்குணனேவஸ்து நிலையுரையாமலறியவல் *
லசதுரருண்டோ, நற்குணவேதங்களிந்தச்சீவன்முத்திபெ *
றப்பிரமஞானந்தோன்றச், சொற்குணங்கள்பிரமத்தின்கு *
ணங்களல்லபிரமமாஞ்சொரூபந்தானே. *

(இ - ள்) நிர்க்குணவஸ்துவின் - குணரகிதமானபிரமவஸ்துவிற்கு — குணங்களுரைப்பது - இத்தன்மையானநாமங்களைச்சொல்வது — தாய்மலடியெனல் - மாதாவந்தியென்பதற்கு — நிகரொன்றதே - சமானமென்று சொல்லாதே — சற்குணனே - சற்குணமுள்ளவனே — வஸ்து நிலையுரையாமல் - வஸ்து நிச்சயத்தையாசிரியர்சொல்லாமல் — அறியவல்ல - தானே தெரிந்துகொள்ளும்வல்லமையுள்ள — சதுரருண்டோ - சதுரானசீடருமுளரோ — ஆதலால் - நற்குணவேதங்கள் - நல்லசுபாவத்தையுடையசுருதிகளானவை — இந்தச்சீவன்முத்திபெற - இச்சீவன்முத்தியையடையும்பொருட்டு — பிரமஞானந்தோன்ற - பிரமஞானந்தோற்றும்படி — சொற்குணங்கள் - உரைத்தசத்தாதிகுணங்கள் — பிரமத்தின்குணங்களல்ல - பிரமத்தின்குணங்களல்லவாம் — பிரமமாஞ்சொரூபம் - அதனருத்தம் பிரமஸ்வரூபமேயாம் — (எ - று.) - - - - *

[இ - ம்] அறிதலிறந்தவிடத்தனுபவமாயுள்ள நிர்க்குணவஸ்து - அறிவிற்கவதானமாகும் பொருட்டுரைக்கும் பரியாயநாமங்களினருத்தப்படிசிந்

திக்கி னிக்குணரூபமிறந் தக்குணாதீதஸ்வரூபம் வெளிப்படுமென்றிமற்றொன்றால் வெளிப்படாததாதலாலங்ஙனங்கூறுஞ்சுருதிப்பிரமாணத்தை யுணர்த்தியதாம்... ...... .......... ...................... ...... ..... ................... (௩௩௯)

(அ-கை.) சச்சிதானந்தப் பொருளொன்றென்பதைச் சுருதியிற்காட்டினதுபோலவுத்தியிலுங்காட்டல்வேண்டுமெனவினுதல்.

மோகவிருள்கெடக்கோடியருணனென வருகுருவேமொழி *
யக்கேளி, ரேகபரிபூரணமாமென்சொருபமென் னுளத்திலிரு*
கும்வண்ண, மாகமங்கள்சொன்னபடியென்னையகண்டா *
ர்த்தமாவறிந்தேனையா, வூகமுமொத்திடவுரைத்தாற்பசுமர *
த்திலாணிபோலுறைக்குநெஞ்சே. *

(இ-ள்) மோகவிருள்கெட - மோகாந்தகாரநீங்க — கோடியருணனென - கோடிசூரியருதயமானதுபோல — வருகுருவே - எழுந்தருளியவாசாரியரே — மொழியக்கேளிர் - அடியேன்சொல்வதைக்கேட்பீர் — ஏகபரிபூரணமாம் - ஒன்றானபூரணஸ்வரூபமாகிய — என்சொருபம் - எனதுபிரமஸ்வரூபம் — என்னுளத்தில் - எனதிதயத்தில் — இருக்கும்வண்ணம் - அழுந்துமாறு — ஆகமங்கள்சொன்னபடி - சுருதிகள்சொல்லியபடி — என்னை - எனதுஸ்வரூபத்தை — அகண்டார்த்தமா - அகண்டப்பொருளாக — அறிந்தேன் - தெரிசித்தேன் — ஐயா - எனதாசிரியரே — ஊகமும் - உத்தியும் — ஒத்திடவுரைத்தால் - பொருந்தும்படியருளினால் — நெஞ்சு - மனதானது — பசுமரத்திலாணிபோல் - பச்சைமரத்திலறையுமாணியைப்போல — உறைக்கும் - ஸ்திரப்படும் —(எ-று.) - *

[இ-ம்,] வெளிப்படை ........ ............... .............................................. (௩௪௦)

(அ-கை) அவ்வினாவிற்குத்தரங்கூறல்

சத்தேசித்தாகுமயலெனிலசத்தாமசத்தானாற்சாக்ஷியெங்கே*
சித்தேசத்தாகுமயலெனிற்சடமாஞ்சடங்களுக்குத்திதியுமி *
ல்லை, யொத்தேதோன்றியசத்துஞ்சித்துநல்லசுகமாகுமேக *
த்துக்கோர், வித்தேயன்னியமாகிற்சடமசத்தாஞ்சுகானுபவ *
ம்விளைந்திடாதே. *

(இ-ள்) சத்தேசித்தாகும் - சத்தாகவிளங்குதலேசித்தாகும் — அயலெனில் - சத்துக்குவேறென்றால் — அசத்தாம் - இல்லாததாம் — அசத்தானால் - இல்லாததாயின் — சாக்ஷியெங்கே - மத்தியமாயிருந்தறியுஞ்சாக்ஷியெங்ஙனமாம் — சித்தேசத்தாகும் - சித்தாயிருத்தலேசத்தாகும் — அயலெனி

ல் - சித்துக்குவேறென்றால் — சடமாம் - அறியாமையாம் — சடங்களுக்கு - அத்திரிசயங்களுக்கு — திதியுமில்லை - விளங்குந்தன்மையுமில்லையாம் — ஆதலால் - ஒத்தேதோன்றிய - பொருந்தத்தோன்றிய — சத்தும் - திரிகாலங்களிலுநசியாதிருக்கின்றசத்தும் — சித்தும் - முக்காலங்களிலுந்தெரிவாகவிளங்கியசித்துமே — நல்லசுகமாகும் - நிரதிசயானந்தமாகும் — ஊகத்துக்கோர்வித்தே - உத்திக்கோர்விதையாகும் — அன்னியமாகில் - வேறானால் — சடமசத்தாம் - சித்துஞ்சத்துஞ்சடமுமசத்துமாம் — சுகானுபவம்விளைந்திடாது - அங்ஙனமாயி லானந்த முதியாமற்றுக்கமுண்டாகும் — (எ-று.) - - - - - *

[ப-ம்.] சத்தே சித்தாகாவிடிற்றன்னையறியுந் தன்மையில்லையென்பார் சாக்ஷியெப்படியெனவும் சித்தேசத்தாகாவிடிற்சர்வம்பிரமமயமாகவிளங்குதலின்றென்பார் சடங்களுக்குத்திதியுமில்லையெனவும் இவ்விருமையினொருமையினுதிப்பதே நிரதிசயானந்தமென்பார் நல்லசுகமாகுமெனவும்இவ்வுத்தியனுடலத்துக்குமூலமென்பார்ஊகத்துக்கோர் வித்தெனவும்வேறுபடினிச்சச்சிதானந்தமனுர்தசடதுக்கமாமென்பார் அன்னியமாகிற்சடமசத்தாஞ்சுகானுபவம்விளைந்திடாதெனவுங்கூறினர் ........(௱சக)

(அ-கை) (இ-து)

வியாதசத்துமுன்னம்விளங்குவதுதன்றேலோவேறொன்றே *
லோ, வாயால்வேறெனிலதுவுமசத்தோசத்தோவசத்தேதன்ம *
லடிமைந்தன், பேயாகாரியஞ்செயுமோவசத்தெனவிப்படி *
யதையும்பிரித்துச்சொன்னால், லோயாதவவத்தையாங்குதர்க்க *
விகற்பங்களைவிட்டொழிந்திடாயே, *

(இ-ள்.) வியாதசத்து - திரிகாலங்களினுநசியாதசத்தானது — முன்னம் விளங்குவது - முன்பிரகாசிப்பது — தன்றேலோ - தன்றேலேயா — வேறொன்றேலோ - மற்றொன்றேலேயா — வாயால்வேறெனில் - வாக்கினால்வேறென்றால் — அதுவும் - அச்சத்தமும் — அசத்தோ - இல்லாததா — சத்தோ - இருப்பதா — அசத்தேல் - இல்லாததென்றால் — மலடிமைந்தன் - வந்தியாபுத்திரன் — பேயா - பேயனே — காரியஞ்செயுமோ - தொழிலைச்செய்வானோ — அதையும் - அக்கிரியைகளையும் — இப்படி - இங்ஙனம் — அசத்தெனப்பிரித்துச்சொன்னால் - அசத்தென்றுபகுத்துச்சொல்வின் — ஓயாதவவத்தையாம் - நீங்காதவவத்தையாம் — குதர்க்க - குதர்க்கமாகிய — விகற்பங்களை - வேறுபாடுகளை — விட்டொழிந்திடாய் - விட்டு நீங்குவாய் — (எ-று) - - - - - - *

[ப-ம்] தன்னையறிவதுதானேயன்றி வேறுமோவென்பார் வியாதச த்துமுன்னம்விளங்குவது தன்னலோவேறென்றலோவெனவும் அங்ஙனமுளைக்குஞ்சத்தமு மிருந்ததுளைக்குமாவில்லாத துளைக்குமா வென்பார் வாயால்வேறெனிலதுவுமசத்தோசத்தோவெனவும்இல்லாததுநிசமு மாவென்பார் அசத்தென்மலடிமைந்தன்காரியஞ்செயுமோவென வும் இல்லாததுநிசமுமென்னி னீங்காதசெநநாவத்தையுண்டாகுமென் பார் அசத்தெனவிப்படியதையும் பிரித்துச்சொன்னலோவாயாதவவத்தை யாமெனவும் இருந்ததேயறிவென் னுமனுபவங்கொண்டில்லாததைநீக்கு வாயென்பார் குதர்க்கவிகற்பங்களைவிட்டொழிந்திடாயெனவுங் கூறினர்.

[இ-உ-க-ம்] இருந்ததுவிளங்குதலிற் சத்தேசித்தெனவும் விளங்கு வதேயிருத்தலிற் சித்தேசத்தெனவும் இவ்வொருமையிற்சுசம்விளைதலின் ஃதேயானந்தமெனவு மிவ் வனுபவத்தா லுத்திப் பிரமாண முணர்த்தி யதாம்......... ............ .............. ............ .... .... ............. .....(௱௪௬)

(அ-கை) சச்சிதானந்தப்பதங்களின்பொருளொன்றென்பதற்க னுபவங்கூறல்

சுருதியுத்தியொத்ததுபோல னுபவமுங்கேள்சுழுத்திச்சுக ※
வானந்த, மிருதிவடிவாதலிலவ்வானந்தமேயறிவாம்வேறங் ※
கில்லைக், சருதுபிரளயஞ்சுழுத்தியிரண்டிலுநீயிருந்திருளைக் ※
காண்கின்றயே, யிருதயத்திப்படிநோக்கியேகபரிபூரண ※
மாயிருந்திடாயே ※

(இ-ள்) சுருதியுத்தி- சுருதியுமுத்தியும் — ஒத்ததுபோல்- பொருந்தின துபோல — அனுபவமுங்கேள்- அனுபவத்தையுங்கேளாய் — சுழுத்தி- சுழுத்தியவத்தையிலுள்ள — சுகவானந்தம் - ஆனந்தமானது — மிருதிவ டிவாதலின்- ஸ்புரணரூபமாதலினல் — அவ்வானந்தமேயறிவாம்- அந் தவானந்தமேஞானமாம் — அங்கு - அவ்விடத்து — வேறில்லை- - மற் றென்றில்லை—சருதுபிரளயம்- நினைக்கின்றகல்ப்பாந்தமும்—சுழுத்தி- சுழுத்தியவத்தையுமாகிய— இரண்டிலும்- இரண்டுகாலத்தும் — நீயிரு ந்து- நீசத்தாகநின்று — இருளை- அந்தகாரத்தை — காண்கின்றயே- பார்க்கின்றயல்லவா— இருதயத்து- உனதிதயத்தில்— இப்படிநோக்கி- இவ்விதமாகப்பார்த்து — ஏகபரிபூரணமாயிருந்திடாய்— ஒன்றனபூர ணஸ்வரூபமாகவேயிருப்பாய்.— (எ-று) - - - ※

[ப-ம்] அறிதலிறந்தசுழுத்தியிலானந்தம் விளங்குதலதற்கேதெரிதலி

னவ்வானந்தமேயறிவென்பார் - சுழுத்திசுகவானந்தமிருதிவடிவாதலின வ்வானந்தமேயறிவாம் வேறங்கில்லையெனவும்- இருளையறியுமிடத்தவ்வ றிவேதானுயிருத்தலினறிவேசத்தென்பார் - பிரளயஞ்சுழுத்தியிரண்டிலு நீயிருந்திருளைக்காண்கின்றுயெனவுங்கூறினர்.

[இ-ம்] சச்சிதானந்தத்தின்பொருளொருமையென்பதற்கனுபவங்கூறியதாம். சுருதியுத்தி யனுபவங்களோடு முணர்த்திய சச்சிதானந்தத்தின் பொருளொருமையின் ஸ்வரூபத்தைத்தேசிக ருபதேசமுகத்தாற்றெரிந்துகொள்க.... ... .... ...... .......... .................... . .... ........ .... .. ....(ரசரு)

(அ-கை) சுருதியுத்தியனுபவப்படிச் சீடன்சகசநிட்டையிற்பெற்றவனுபவங்கூறல்

பலகலையுமுணர்ந்தகுருமொழிந்தபடியிவனுமனுபவம்வி *
டாமற், பலமலர்ன்மதுப்போலச்சச்சிதானந்தமொன்றும் *
பரமார்த்தத்தைப், பலபொழுதுங்கண்மூடிச்சமாதியிருந் *
தான்விழித்துப்பார்த்தபோது, பலவடிவாஞ்சராசரசித்திர *
ங்களெல்லாந்தோன்றுமொருபடமானுனே. *

(இ-ள்) பலகலையும் - சகலசாஸ்திரங்களையும் — உணர்ந்தகுரு - அறிந்த தேசிகரானவர்— மொழிந்தபடி- அனுக்கிரகித்தவண்ணம் — இவனும்- இச்சீடனும்— அனுபவம்விடாமல் - அனுபவத்தைவிட்டுநீங்காமல்— பலமலரின்மதுப்போல - நாநாபுட்பங்களினிருக்குந்தேனொருமித்தது போல—சச்சிதானந்தமொன்றும்- சத்துச்சித்தானந்தங்களேகமாகிய— பரமார்த்தத்தை- பிரமப்பொருளை— பலபொழுதும்- எப்போதும்— கண்மூடிச்சமாதியிருந்தான் - ஊனக்கண்ணைமூடிஸ்வரூபசமாதியிலிருத்தனன்—விழித்துப்பார்த்தபோது- ஞானவிழியாற்பார்க்கும்போது— பலவடிவாம் - நாநாவிதவுருவங்களான — சராசரசித்திரங்களெல்லாம்- தாபரசங்கமமாகியசித்திரங்களனைத்தும்— தோன்றும் - தோன்றுகின்ற— ஒருபடமானுன் - ஓர்சித்திரபடமானுன்.—(எ-று) - - *

[இ-ம்] சச்சிதானந்தப்பதங்களின் பொருளொருமையான வத்துவிதஸ்வரூபமேதானுகித்தானேயாவுமாகவிளங்குகின்ற சாக்ஷாத்காரானுபவத்தைப்பெற்றுருடனுயினுனென்பதாம்.... ..,...... .. .. ...... .. ....(ரசச)

(அ-கை) துரியாதீதமேதுரியமாகவிளங்குமனுபவத்தின்னவநவமா ரமிக்கும்பொருட் டீ°துதயமாதற்கிடமான ஞானபூமியைக்குறித்துநான்குலகையாகவினுதல்.

இதயமொத்தசற்குருவேநமக்கிதுவேவிநோதமன்றியினி *
வேறுண்டோ,வதையுரைத்துமதைநினைத்துமிருப்பதன்றே *
ஞானிகளுக்கானநீதி, முதலுரைத்ததுரியாதீதமுமேழாம்பூ *
மியுமுக்கியமாமென்ற, பதமுமதின்வகையுமெனக்கெளி *
தாகத்தெளியும்வண்ணம்பணித்திடீரோ. *

(இ-ள்) இதயமொத்தசற்குருவே - மனமொத்தவென்னுடையவாசிரியரே — நமக்கு - நமக்கு — இதுவே - இவ்விசாரமே — விநோதமன்றி - லீலையல்லாமல் — இனிவேறுண்டோ - இனிவேறுமொன்றுளதோ — அதை - அப்பிரமத்தை — உரைத்தும் - வாக்கினாற்பேசியும் — நினைத்தும் - மனதினாற்றியானித்தும் — இருப்பதன்றே - இருப்பதல்லவா — ஞானிகளுக்கானநீதி - ஞானவான்களுக்கான நியாயம் — முதலுரைத்த - முன்சொன்ன — துரியாதீதமும் - துரியாதீதத்தையும் — ஏழாம்பூமியும் - ஏழாவதுபூமியும் — முக்கியமாமென்றபதமும் - முக்கியமாமென்றுசொல்லியபதமும் — அதின்வகையும் - அதன்பகுப்பையும் — எனக்கு - அடியேனுக்கு — எளிதாகத்தெளியும்வண்ணம் - சுலுவாகத்தெரியும்படி — பணித்திடீர் - அருள்செய்யீர் — (எ-று) [இ-ம்] வெளிப்படை.........(௱சரு)

(அ-கை) சுவானுபவத்திற்செல்லுமனோலயமார்க்கமானஞானபூமியைக்கூறுவான்றொடங்கியுற்பத்திக்கிரமமானவஞ்ஞானபூமியின்வகையாகியநாமங்களேழையுமுற்கூறுகின்றார்.

வினவுமிடத்தஞ்ஞானபூமிகளேழ்ஞானபூமிகளேழென்பா *
ரினியவற்றுளஞ்ஞானபூமிகளேழையுமுந்தியியம்பக்கே *
ளாய், தனிவித்துசாக்கிரஞ்சாக்கிரமகாசாக்கிரஞ்சாக்கிரத்தை *
ச்சார்ந்த, கனவுகளுக்கனவுசாக்கிரஞ்சுழுத்தியென்றெழு *
பேர்கணித்தார்மேலோர். *

(இ-ள்) வினவுமிடத்து - விசாரிக்குமிடத்தில் — அஞ்ஞானபூமிகளேழ் - அஞ்ஞானபூமிகளேழ் — ஞானபூமிகளேழ் - ஞானபூமிகளேழ் — என்பார் - என்றுசத்துக்கள்சொல்லுவார்கள் — இனியவற்றுள் - இனியவைகளுக்குள் — அஞ்ஞானபூமிகளேழையும் - அஞ்ஞானபூமிகளேழினையும் — முந்தியியம்பக்கேளாய் - முன்புசொல்லுதுங்கேட்பாய் — தனி - தனிமையான — வித்துச்சாக்கிரம் - வித்துநனவெனவும் — சாக்கிரம் - நனவெனவும் — மகாசாக்கிரம் - மகாநனவெனவும் — சாக்கிரத்தைச்சார்ந்தகனவு - நனுக்கனவெனவும் — கனு - சொர்ப்பனமெனவும் — கனவுசாக்கிரம் - கனுநனவெனவும் — சுழுத்தியென்று - சுழுத்தியெனவும் — எழுபேர் - எழு

தாமங்கள்— மேலோர் - மகான்கள்— கணித்தார் - கூறினர்—(எ-று) *
[இ-ம்.] வெளிப்படை ........ .... ................. ........... ....(௱௪௬)

(அ-கை) அவற்றுணான்குபூமிகளினிலக்கணங்கூறல்

முந்தவகண்டத்தெழுமோரறிவுமாத்திரமதுதான்முதல்வித்தாகு *
மிந்தவறிவிற்பண்டில்லாவகந்தைமுளைபோலாமிதுநனவாம் *
வந்துவந்துபிறவிதொறுமகமமதைவளருமதுமகாநனவா *
நந்துமகங்கொடுநனவின்மனோராச்சியஞ்செயலேநனக்கனவே *

(இ-ள்) முந்த - முன்னமேயுள்ள — அகண்டத்தெழும் - அகண்டமானசத்திலுதித்த — ஓரறிவுமாத்திரம் - ஒருணர்வாகிய — அதுதான் - அதுவே — முதல்வித்தாகும் - முன்னுண்டானவித்துநனவாம் — இந்தவறிவில் - இவ்விதையாகியவுணர்வில் — பண்டில்லா - முன்னமில்லாத — அகந்தை - அகந்தையானது — முளைபோலாம் - அங்குரம்போலவுண்டாம் — இதுநனவாம் - இதுசாக்கிரமாகும் — வந்துவந்து - உண்டாகியுண்டாகி — பிறவிதொறும் - சநநங்கடோறும் — அகமமதைவளரும் - யானெனதென்கின்றவிருக்ஷம்வளரும் — அதுமகாநனவாம் - அதுமகாசாக்கிரமாம் — நந்தும் - நசிக்கின்ற — அகங்கொடு - அகத்தைக்கொண்டு — நனவில் - சாக்கிரத்தில் — மனோராச்சியஞ்செயல் - மனோராச்சியஞ்செய்வது — நனக்கனா - சாக்கிரசொர்ப்பனமாம் — (எ-று) - - - *

[ப-ம்] அறிவறியாமையின்றியறிவாகவிளங்குகின்றதன்னிடத்திலெதிரிட்டறியவுதித்தபோதமேசகசீவபரத்துக்குமூலமானபிரகிருதியென்பார் - முதல்வித்தாகுமெனவும் - இவ்வறிவிற்பிரதிபலனமாகவெளிப்படுஞ்சாயையையானென்னுமறிவே சகசீவபரவுற்பத்திக்கடையாளமானமகதத்துவமென்பார் - நனவெனவும் - அச்சகசீவபரங்களையானெனதெனமமதாகங்காரமாகவெளிப்படுமறிவே யகங்காரதத்துவமென்பார் - மகாநனவெனவும் - அச்சகசீவபரங்களினிலுருவமே நானெனவியாபித்ததுவாகநிற்குமறிவு தெரிதல்போலத் தோற்றுமென்பார் - நனக்கனவெனவுங்கூறினர்..... ....... . ... ..... .......... ................ . .......... . .....(௱௪௭)

(அ-கை) ஏனையமூன்றுபூமிகளினிலக்கணங்கூறல்

உண்டுறங்கிமனோராச்சியஞ்செயல்சொர்ப்பனமெனும்பே *
ருடையதாகும், பண்டுநனக்கண்டுமறந்ததைமீண்டுநினைப் *
பதுசொர்ப்பனநனவாம், மண்டுமிருண்மூடுவதுசுழுத்தியா *
மஞ்ஞானவகைகள்சொன்னோம், விண்டுநிறைமுத்திதரு *
ஞானபூமிகளேழும்விளம்பக்கேளாய். *

(இ-ள்.) உண்டுறங்கி - புசித்து நித்திரைசெய்து — மனோராச்சியஞ்செயல் - மனோராச்சியஞ்செய்வது — சொர்ப்பனமெனும்பேருடையதாகும் - கனவென்னு நாமமுள்ளதாம் — பண்டு நனுக்கண்டு - முன் சாக்கிரத்திற் பார்த்து— மறந்ததை - மறந்துவிட்டதை — மீண்டு நினைப்பது - திரும்ப ஞாபகப்படுத்துவது — சொர்ப்பனநனவாம் - சொர்ப்பனசாக்கிரமாம் — மண்டுமிருண்மூடுவது - மிகுந்தவிருட்டுமூடிக்கொள்வது — சுழுத்தியாம் - சுழுத்தியாகும் — அஞ்ஞான்வகைகள்சொன்னேம் - அஞ்ஞானபூமிகளின்வித்தைச்சொன்னேம் — விண்டு - சடமுதலியவைகள்வேறுபட்டு — நிறைமுத்திதரும் - பரிபூர்ணமாண்கைவல்லியத்தைக்கொடுக்கும் — ஞானபூமிகளேழும் - ஞானபூமிகளேழையும் — விளம்பக்கேளாய் - சொல்லக்கேட்பாய். — (எ-று) - - - - - - ※

[ப-ம்] அச்சகசீவபரங்களின்யதார்த்தமிஃதெனத்தோன்றாததனில்வியாபரிக்குமறிவே மனோராச்சியமென்பார் - சொர்ப்பனமெனவும் - அவ்வறிவு சகசீவபரங்களை மறந்து நினைக்குமென்பார் - சொர்ப்பன நனவெனவும் - அச்சகசீவபரங்களே தானாகிநின்று தன்னைமுழுதுமறந்த வறியாமையேயீளாதமகாசுழுத்தியென்பார் - இருண்மூடுவதுசுழுத்தியாமெனவுங்கூறினர்.

[இ உ-க-ம்] வித்துநனவு - நனவு - மகாநனவாகியவிம்மூன்றும் - அறிவுபரிணமித்தாகாரமாயெதிரிடுதலாற்சாக்கிரமெனவும் - சாக்கிரசொர்ப்பனம் - சொர்ப்பனம் - சொர்ப்பனசாக்கிரமாகியவிம்மூன்றுமெதிரிடுகின்றவர்காரங்களினறியாமையோடு விபகாரங்கள்செய்தலின - சொர்ப்பனமெனவும் - சுழுத்தியொன்றுஞ் சிருட்டிமுதலிதுசாறுந்தன்யதார்த்தந்தெரியாமல்விடயாந்த காரமாகவுறங்குதலிற்சுழுத்தியெனவுங்கூறினொன்பதாம் .......................................... (ஙசஅ)

(அ-கை) ஞானபூமிகளினாமங்களேழையுங்கூறுகின்றார்.

புலவர்புகழ்முதற்பூமிசுபேச்சைவிசாரணையிரண்டாம்பூமி ※
யாகு,நலதனுமானசிமூன்றாம்பூமிசத்துவாபத்திநாலாம்பூமி ※
சொலுமசம்சத்திப்பேருமபதார்த்தாபாவனைப்பேருந்துரி ※
யப்பேரு,மலிணமறுமசேனையைந்தாறேழுபூமிகளாவகுத் ※
தார்மேலோர் ※

(இ-ள்) புலவர்புகழ் - அறிஞர்சுடுதியாநின்ற — முதற்பூமி - முந்தின பூமியினாமம் — சுபேச்சை - சுபம்விரும்பலெனவும் — இரண்டாம்பூமி -

இரண்டாம்பூமியினாமம் — விசாரணையாகும் - விசாரமெய்தலெனவும் — மூன்றாம்பூமி - மூன்றாம்பூமியினாமம் — நலதனுமானசி - நல்லமனஞ்சிறுகலெனவும் — நாலாம்பூமி - நான்காம்பூமியினாமம் — சத்துவாபத்தி - உண்மையிலேமன்னிநிற்றலெனவும் — ஐந்து - ஐந்தாம்பூமியின் — பேரும் - நாமம் — சொலுமசம்சத்தி - சொல்லாநின்றசங்கற்பமறலெனவும் — ஆறு - ஆறாம்பூமியின் — பேரும் - நாமம் — பதார்த்தாபாவனை - பதார்த்தவெண்ணமறுத்திடலெனவும் — ஏழு - ஏழாவதுபூமியின் — பேரும் - நாமம் — துரியம் - துரியமெனவும் — மலினமறுமசனே - களங்கமறுமைந்தா — மேலோர் - மகான்கள் — பூமிசவாவகுத்தார் - சத்தபூமிகளாகப்பிரித்தார்கள் — (எ - று) - - - - - ✻

[இ - ம்] வெளிப்படை ..... ........... ..... ..... ......... ............ (௱௪௯)

(அ - கை.) அவற்றுள் மூன்றுபூமிகளினிலக்கணங்கூறல்.

துர்ச்சங்கநிவிர்த்திவந்து சிவஞானம்விரும்புவது சுபேச்சையாகு ✻
நற்சங்கமொழிவினவி ஞானநூல்பழகல்விசாரணையாநம்பி ✻
முற்சங்கவிஷீணைகள்விடற னுமானசியிந்தமூன்றினாலுஞ் ✻
சற்சங்கமனதிலுண்மையறிவுதித்தல்சத்துவாபத்திதானே ✻

(இ - ள்.) துர்ச்சங்கநிவிர்த்திவந்து - துர்ச்சங்கநீங்கி — சிவஞானம்விரும்புவது - சிவஞானத்தையாசிப்பது — சுபேச்சையாகும் - சுபம்விரும்பலாம் — நற்சங்கம் - சாதுசங்கத்தைச்சேர்ந்து — மொழிவினவி - அவருரைக்கும்வாக்கியத்தைவிசாரித்து — ஞானநூல்பழகல் - ஞானசாஸ்திரத்தையப்பியாசிப்பது — விசாரணையாம் - விசாரணையாகும் — நம்பி - விசாரத்தின்வெளிப்படும்பொருளைநம்பி — முற்சங்கவிஷீணைகள் - முன்னுள்ளவிச்சைகளை — விடல் - நீக்குதல் — தனுமானசி - மனஞ்சிறுகலாம் — இந்தமூன்றினாலும் - இம்முப்பூமிகளின்பழக்கத்தினாலும் — சற்சங்கமனதில் - சற்சங்கமபழகியமனதில் — உண்மையறிவுதித்தல் - மெய்யுணர்வுபிறத்தல் — சத்துவாபத்தி - உண்மையிலேமன்னிநிற்றலாம் — (எ - று) (௱௫௰)

(அ - கை) ஏனையமூன்றுபூமிகளினிலக்கணங்கூறல்.

தத்துவத்தின்மனமுறைத்துமித்தையெலாமறத்தலசம்சத்தி ✻
யாகு, மத்துவிதானந்தம்வருந்திரிபுடிபோம்பதார்த்தாபா ✻
வனையதாகும், வஸ்துநிலையிருந்தபடியிருந்தமவுனசுபாவத் ✻
துரியமாகு, மித்துரியபூமியைமுன்றுரியாதீதப்பதமென்ற ✻
துவுங்கேளாய் ✻

(இ - ள்) தத்துவத்தில் - உண்மையில் — மனமுறைத்து - மனந்திரப்பு

ட்டு—மித்தையெலாம்- பொய்மைகளனைத்தையும் — மறத்தல் - மறந்துவிடுவது — அசம்சத்தியாகும் - சங்கற்பமறலாம்— அத்துவிதானந்தம்வரும்- அத்துவிதானந்தமுண்டாதலும் — திரிபுடிபோம்- திரிபுடிநீங்குதலும் — பதார்த்தாபாவனையதாகும் - பதார்த்தமெவ்ணமறுத்திடலெனவும்— வஸ்துநிலை - பிரமவஸ்துவினிச்சயம்— இருந்தபடியிருந்த - இருந்தவண்ணமிருக்கின்ற— மவுனசுபாவம்- மோனத்தன்மையே— துரியமாகும் - துரியமாம்— இத்துரியபூமியை - இந்தத்துரியபூமியை— முன்- முன்பு— துரியாதீதப்பதமென்றதுவும்- துரியாதீதப்பதமென்றுசொன்னதும்—கேளாய் - கேள் —(எ - று) - - - ✻

[இ-உ-க-ம்] சாதனசதுட்டயமுதித்து விடயதோஷதிருட்டியுண்டாய்த்தன்னைத்தரிசிக்கவிரும்புவதேசுபேச்சையெனவும்- அவ்விருப்பத்தாற்றூண்டிய சித்துருவமுந்தானல்லாதசடவுருவமுமிஃதெனவிசாரித்தல்விசாரணையெனவும்- அவ்விசாரத்திலுள்ளசித்தில்வாசனையுண்டாய்ச்சடவாசனைவிட்டுமனமடங்குதலேதனுமானசியெனவும். அச்சித்துவாசனைமிகுந்தஃதனுபவமாசவெளிப்படுதல்- சத்துவாபத்தியெனவும் - அச்சித்துதயத்தினாற்சடபாவநீங்குதல் - அசம்சத்தி யெனவும் - அச்சித்திலானந்தோதயமாயிரண்டறயாவுந் தானேதானு யிருத்தல் - பதார்த்தாபாவனையெனவும்- இவ்வனுபவமெப்போதுமுள்ள தாகவிளங்குதல் - துரியமெனவுங்கூறினதாம்.......................................................................................... (ா௫௪)

( அ-கை ) இத்துரியபூமியே துரியாதீதமாகு மியல்புதோன்ற சத்தபூமியையும் பஞ்சாவத்தையாகப் பகுத்ததன் வகையு மத னிலக்கணமுங்கூறுகின்றார்.

முற்புவிமூன்றினுமுலகந்தோன்றுதலாற்சாக்கிரமாம்மூன் ✻
றற்கப்பாற், சொர்ப்பனமாமதுவுமெள்ளநழுவுமஞ்சாம்பூ ✻
மியேசுழுத்தியாகு, மற்புதமாஞ்சுவானுபவமிகுமாறும்பு ✻
விதுரியமதற்கப்பாலோர், கற்பனையிலாதவிடமதீதமெ ✻
ன்றுமவுனமாக்காட்டும்வேதம். ✻

(இ-ள்) முற்புவிமூன்றினும் - முதற்கட்கூறியபூமிகண்மூன்றிலும் — உலகந்தோன்றுதலால்- சகந்தோற்றுகின்றபடியால் — சாக்கிரமாம் - அம்மூன்றுபூமியுநனவாகும்— மூன்றற்கப்பால் - நாண்காவதுபூமி— சொர்ப்பனமாம் - கனவாகும்— அதுவுமெள்ளநழுவும் - அக்கனவுமெள்ளநீங்குகின்ற — அஞ்சாம்பூமியே - ஐந்தாம்பூமியே — சுழுத்தியாகும்- சுழுத்தியாம்—அற்புதமாம்-அதிசயமாகிய— சுவானுபவமிகும்- சுவானு

பவமிருந்த— ஆறும்புவி-ஆறும்பூமி— துரியமாம்- துரியமாகும்— அதற்கப்பால்-ஏழாம்பூமி— ஓர்கற்பனை - ஒருகற்பனையும் — இல்லாதவிடம்-அற்றவிடம்— அதீதமென்று- துரியாதீதமென— மவுனமாய் -மௌனமாக—வேதம்-சுருதியானது—காட்டும்- தரிசிப்பிக்கும்—(எ-று) *

[இ-ம்.] சுபேச்சை விசாரணை தனுமானசி யாகியவிம்மூன்றிற்சகம்விடயரூபமாகத்தோற்றுதலினவைசாக்கிரமெனவும் - சத்துவாபத்தியிற்சக நினைவுருவாகத் தோற்றுதலி னதுசொர்ப்பன மெனவும் - அசம்சத்தியிற்சகந்தோற்றாமையின் - சுழுத்தியெனவும்- பதார்த்தாபாவனையிற்சகஞ் சின்மாத்திரமாகத்தோற்றுதலின்- அது துரியமெனவும் - துரியத்திற்காண்பானும்- காணப்படுஞ்சகத்துஞ்சத்தாமாத்திரமாகவிளங்குதலின்- அது துரியாதீதமெனவுங்கூறினதாம். அனுபவிக்கிப்பூமிகளைத் தவத்தையானதெனக்கொள்க........................ ...... .... ......... ..... . ... . .............. (௱௫௨)

(அ·சை.) இவ்வேழாம்பூமியைத்துரியமென்பதற்கனுபவங்கூறல்

துரிய நிலந்தனிற்றுரியாதீதமெனின்மயக்கமென்றுசுருதி *
மேலோ, ரரியதொருவிதேகமுத்தியதீதமென்பாரதுகணை *
க்கிலாறும்பூமி, மருவுசுழுத்தியிற்காட்சிசுழுத்தியென்பா *
ரென்பதுநீமனத்திற்கொள்வாய், பெருமைதருஞானபூமி *
யின்விகற்பமின்னமுண்டுபேசக்கேளாய். *

(இ-ள்) துரியநிலந்தனில்- துரியபூமியை — துரியாதீதமெனில் - துரியாதீதமென்றால்— மயக்கமென்று- மயக்கம்வருமென்று — சுருதிமேலோர் - வேதாந்தமுணர்ந்தமகான்கள் — அரியதொருவிதேகமுத்தி - எட்டுதற்கரிய வொப்பற்றவிதேககைவல்லியத்தை — அதீதமென்பார் - துரியாதீதமென்றுசொல்லுவார்கள் —அதுகணக்கில் - அந்தக்கணக்கிற்கு—ஆறும்பூமி-ஆறுவதுபூமியானபதார்த்தாபாவனை—மருவுசுழுத்தியில்- பொருந்தாநின்றசுழுத்தியை — காட்சிசுழுத்தியென்பார்- காணுமறிவாகிய சுழுத்தியென்று சொல்லுவார்கள் — என்பது - என்றதை— நீமனத்திற்கொள்வாய்- நீமனதில்வைப்பாய்—பெருமைதரும்- மாட்சிமையைக்கொடுக்கின்ற— ஞானபூமியின்-ஞானபூமிகளின்—விகற்பம் - பேதங்கள்— இன்னமுண்டு - இன்னமிருக்கின்றது — பேசக்கேளாய்- அதைச்சொல்லக்கேட்பாய்— (எ-று) *

[இ-ம்] இவ்வேழாம்பூமியைத்துரியமெனவுந்துரியாதீதமெனவுங்கூறினையமுண்டாமெனக்கருதி யதனைச்சீவன்முத்தியின் றிறமானதுரியமெனவும இதுநீங்கியவிதேகமுத்தியைத் துரியாதீதமெனவுங் கூறுவர் அங்ஙனங்கூறுமிடத்தைந்தாம்பூமியாகிய சுழுத்தியிற்சகந்தோன்றாமற்

ஞன் றேன்றிநிற்றல் துரியமாதலின் துரியமென்னும் ஆறாம்பூமியைச் சாட்சிசுழுத்தியெனக்கொண்டு அதனோடுசேர்த்து இவ்விரண்டையுஞ்சுழுத்தியென்று கூறினானென்பதாம்.......... ......... ................ .... (௱௫௩)

(அ-கை) ஞானபூமிகளையடைந்தசீவன்முத்தர்களினவசரநாமங்கூறல்.

முன்னிலங்களேறியமூவருமப்பியாசிகளாமுத்தரல்லர் *
பின்னிலங்கள்வரன்வரியான்வரிட்டனெனுஞ்சீவன்முத்தர் *
பேதமாகுஞ், சொன்னநடுப்பூமிவந்தஞானிகளேபிரமவித் *
தாந்துரியமுத்த, ரின்னமுமப்பூமிகளின்பெருமைதனைநீய *
றியயான்சொல்வேனே. *

(இ-ள்) முன்னிலங்களேறிய - முதற்கணுள்ளமூன்றுபூமிகளிலேறிவந்த— மூவரும்- மூன்றுபேர்களும்—அப்பியாசிகளாம்- சாதகர்களாம்— முத்தரல்லர்- சீவன்முத்தர்களல்லர் —பின்னிலங்கள்- இறுதியிலுள்ளமூன்றுபூமிகளிலைந்தாம்பூமியிலேறியவன்— வரன்- பிரமவரனென்னவும்— ஆறாம்பூமியிலேறியவன் - வரியான் - பிரம்வரியானெனவும் — ஏழாம்பூமியிலேறியவன்- வரிட்டனெனும்- பிரமவரிட்டனெனவும் — சீவன்முத்தர்பேதமாகும் - சீவன்முத்தர்களின்பேதங்களாம் — சொன்ன - இப்போதுசொல்லியபூமிகளின் — நடுப்பூமிவந்த - மத்தியாகியநாலாம்பூமியிலேறிய— ஞானிகள் - ஞானவான்கள்— பிரமவித்தாம்- பிரமவித்தென்னும்— துரியமுத்தர்- மேலானசீவன்முத்தர்களாம் — இன்னமும்- மேலும்— அப்பூமிகளின்பெருமைதனை- அந்தஞானபூமிகளின்பெருமையை— நீயறிய- உனக்குத்தெரியும்பொருட்டு — யான்சொல்வேன்- நானுரைப்பேன்—(எ-று) - - - - - *

[இ-ம்] முன்மூன்றுபூமியையடைந்தவப்பியாசிகளெனவுமற்றநான்குபூமியையடைந்தவர்சீவன்முத்தர்களெனவுங்கூறினதாம் ........(௱௫௪)

(அ-கை) ஞானபூமிகளின்முன்மூன்றினப்பியாசத்தால் வரும்பயனுமதின்முதற்பூமியின்றன்மையுங்கூறல்

நாலாம்பூமியில்வருமுன்மூன்றுபூமியுமடைந்துநடந்து *
மாண்டோர், மேலானபதமடைந்துபிறந்துமெள்ளமெள் *
ளவந்துவீடுசேர்வார், மாலானபவத்தில்விழார்முதற்பூமிகி *
டைப்பதுவேவருத்தமைந்தா, காலானமுதற்பூமிகைவந்தா *
ன்முத்தியுங்கைவந்ததாமே. *

(இ-ள்) நாலாம்பூமியில் - நான்காம்பூமியில் — வருமுன்- வருதற்கு

முன்னம்— மூன்றுபூமியுமடைந்து- மூன்றுபூமியையுஞ்சேர்ந்து—நடந்து- அவற்றையனுஷ்டித்துவரும்போது — மாண்டோர்- மரித்தவர்கள்— மேலானபதமடைந்து- உயர்ந்தபதவியைப்பெற்று— பிறந்து- பூமியிற்சனித்து — மெள்ளமெள்ளவந்து - கொஞ்சங்கொஞ்சமாகவேறி— வீடுசேர்வார்- முத்தியையடைவார்கள்— மாலானபவத்தில்விழார்- இச்சாரூபமானசநநத்திலமிழார்— முதற்பூமிகிடைப்பதுவே- முதற்பூமியானசுபேச்சையுண்டாவதே— வருத்தம்- பிரயாசமாம்— மைந்தா- மகனே— சாலானமுதற்பூமி- ஆதியானமுதற்பூமி— கைவந்தால்- கைவசமானால்— முத்தியும்- மோட்சமும் — கைவந்ததாம் - கைவசமானதாம் —(எ-று.) [இ-ம்] வெளிப்படை......... .......... .......... ... . (௱௫௫)

(அ-கை) அப்பியாசபூமியையடைந்தவனெவ்விதத்திலு மனுபவியாவனென்பதுகருதி யவனனுபவியேயெனக்கூறுதல்

இப்புவியிலிஞ்ஞானபூமியொன்றிலிரண்டிலடைந்திருந்தா *
ராஞெ, லப்புருடர்மிலேச்சராகிலுமுத்தர்குருபாதத்தாணை *
மெய்யே, தப்புரையென்றவர்கெடுவார்நடுவானமறைகளை *
நீசங்கியாதே, செப்புமொழிவழிதிடமாயசம்பிரமமென் *
றிருந்துதெளிந்திடாயே. *

(இ-ள்.) இப்புவியில்-இவ்வுலகத்தின்கண்— இஞ் ஞானபூமி- இந்தஞானபூமிகளேழில்— ஒன்றில் - சுபேச்சையிலாவது— இரண்டில்-விசாரணையிலாவது — அடைந்திருந்தாரானால்- சேர்ந்திருப்பாராயின்—அப்புருடர்- அந்தப்புருடர்கள்— மிலேச்சராகிலும் - மிலேச்சர்களானலும் —குருபாதத்தாணை-தேசிகர்திருவடியாணை— முத்தர்- சீவன்முத்தராவரென்பது— மெய்யே- சத்தியமே— தப்புரையென்றவர்- இதைப்பொய்வசனமென்றவர்கள்— கெடுவார்- பவத்தில்வீழ்வார்கள்— நடுவானமறைகளை - நடுவுநிலைமையானவேதவாக்கியங்களை-- நீசங்கியாதே- குதர்க்கமாகநீசங்கைபண்ணுதே— செப்புமொழிவழி - போதிக்கின்றவுபதேசமார்க்கத்தில்— திடமாய் - ஸ்திரமாகச்சென்று— அசம்பிரமமென்று- கூடஸ்தனே பிரமமென்று — இருந்து தெளிந்திடாய்- சகசசமாதியிலிருந்துதெளிவாய்— (எ-று) - - - - - *

[இ-ம்] இவ்வப்பியாசபூமியையவசிய மடையும்பொருட் டவைகளின்பெருமையையுமவைகளாற்பெறும்பயனையுங்கூறினதாம்......(௱௫௬)

(அ-கை) முத்தியையடைதற்குவன்னச்சிரமபேதம்வேண்டுவதின்றென்பதுதோன்ற விப்பூமிகளின்முடிவான துரியாதீதந்துறவறத்தார்க்கன்றி

யில்லறத்தார்க்குவாராவென்னு மையத்தைநீக்கவேண்டுமெனவினுதல்.

பொல்லாதமிலேச்சருக்கும்விதேசமுத்திதருஞானபூமி *
யென்று, நெல்லாகிமுளைக்குமெனைத்தண்டுலமாக்கியகுரு *
வேநீர்சொன்னீரோ, யில்லாளுங்குடும்பம்விட்டுச்சந்நியாச *
ம்புகுந்தேகாங்கியானே, ரல்லாமன்முத்திபெருதொன்றுசி *
லர்சொன்மயக்கமகற்றுவீரோ. *

(இ-ள்) பொல்லாதமிலேச்சருக்கும் - கொடியரானமிலேச்சர்களுக்கும்— விதேசமுத்திதரும் - விதேசகைவல்லியத்தைக்கொடுப்பது — ஞானபூமியென்று - ஞானபூமியாமென்று— நீர்சொன்னீர் - தேவரீரருளினீர்— நெல்லாகி - நெல்வித்தைப்போல — முளைக்குமெனை - சனித்துக்கொண்டிருக்குமடியேனை — தண்டுலம் - அரிசியைப்போல— ஆக்கியகுருவே - சனியாமற்செய்தவாசிரியரே — இல்லாளுங்குடும்பம்விட்டு - மனைவிமுதலியகுடும்பத்தைத்துறந்து— சந்நியாசம்புகுந்து - துறவைப்பெற்று— ஏகாங்கியானேரல்லாமல் - தனித்தவர்களேயன்றி— முத்திபெருதொன்று - மற்றவில்லறத்தார்மோட்சமடையமாட்டார்களென்று— சிலர்சொன்மயக்கம் - சிலர்சொல்லுகின்றபிரமையை— அகற்றுவீர் - நீக்குவீர் —(எ-று) [இ-ம்] வெளிப்படை........ ..... ........ .... .....(௱௫௭)

(அ-கை.) நால்வகைத்துறவினுமமுமவற்றின்காரணமுங்கூறல்

சிட்டர்புகழ்மகனே நீசங்கித்தசங்கைநன்றுதெரியக்கேளாய் *
கட்டழியுந்துறவுநால்வகையாகுமவைகளுக்கங்காகும்பேர்கள் *
பட்டதுயர்கெடுங்குடீசகம்பகூதகமம்சம்பரமாம்சம் *
விட்டகலுந்துறவுக்குவிராகங்காரணமன்றிவேடமன்றே *

(இ-ள்) சிட்டர்புகழ்மகனே - சற்சனர்துதிக்கின்றமைந்தா— நீசங்கித்தசங்கை - நீவினவினவினுவானது— நன்று - நன்றும்— தெரியக்கேளாய் - தெரியக்கூறுதுங்கேள்— கட்டழியுந்துறவு - பந்தமழிகின்றசந்நியாசமானது— நால்வகையாகும் - நான்குவிதமாம்—அவைகளுக்கு - அந்நான்குக்கும்— அங்காகும்பேர்கள் - அவ்விடத்தாகுநாமங்கள் —பட்டதுயர்கெடும - உண்டானதுன்பநசிக்கின்ற — குடீசகம் - குடீசகசந்நியாசமெனவும்— பகூதகம் - பகூதகசந்நியாசமெனவும்— அம்சம் - அம்சசந்நியாசமெனவும்— பரமாம்சம் - பரமாம்சசந்நியாசமெனவும்— விட்டகலும் - பந்தத்தைவிட்டுநீங்கும் — துறவுக்கு - இச்சந்நியாசங்களுக்கு— விராகங்காரணமன்றி - நிராசைகாரணமேயல்லாமல் — வேடமன்று - வேடங்காரணமன்றும்— (எ-று) [இ-ம்] வெளிப்படை.(௱௫௮)

(அ-கை) துறவின் காரணமான விராக மூன்றினுமமுமவைகளினிலக்கணமுங் கூறல்.

மந்தமுந்தீவிரமுந்தீவிரதரமுமென மூன்றுவகைவிராகம் *
வெந்துயரம்வரும்பொழுதுகுடும்பத்தைவெறுத்துவரும் *
விராகமந்த, மிந்தவுடலளவுமனைதனம்வேண்டாமெனவிட *
றீவிரமென்பார்க, ளந்தணர்நூன்மித்தையெனவிடலதுதீ *
விரதரமாமறிந்திடாயே. *

(இ-ள்) விராகம் - விராகமானது — மந்தமும் - மந்தவிராகமும் — தீவிரமும் - தீவிரவிராகமும் — தீவிரதரமும் - தீவிரதரவிராகமும் — என மூன்றுவகை - என்றுமூன்றுவிதமாம் — அவைகளின் - வெந்துயரம்வரும்பொழுது - வெவ்வியதுன்பம்வரும்போது — குடும்பத்தை - சங்சாரத்தை — வெறுத்துவரும்விராகம் - வெறுக்காநின்றவிராகமானது — மந்தம் - மந்தவிராகமாம் — இந்தவுடலளவும் - இத்தேகாந்தபரியந்தம் — மனை - மனைவியும் — தனம் - திரவியமுமுதலியவைகளை — வேண்டாமெனவிடல் - வேண்டாமென்றுதுறத்தல் — தீவிரமென்பார்கள் - தீவிரவிராகமென்றுசொல்லுவார்கள் — அந்தணர் - வேதியர்க்குரிய — நூல் - கன்மகாண்டங்களை — மித்தையெனவிடலது - கற்பிதமென்று துறத்தலானது — தீவிரதரமாம் - தீவிரதரவிராகமாகும் — அறிந்திடாய் - இவற்றைத்தெரிந்துகொள்ளாய் — (எ-று) [இ-ம்] வெளிப்படை. .....(௱௫௯)

(அ-கை) மந்தவிராகம் பயனின்றென்றுந் தீவிரவிராகசந்நியாசமிரண்டின்றன்மையிஃதென்றுங்கூறல்.

பாவிமந்தவிராகத்திற்சந்நியாசங்களொன்றும்பலித்திடா *
தே, தீவிரத்திற்குடீசகமும்பகூதகமுமென்றிரண்டுதிறங்க *
ளுண்டாந், தாவிநடந்திடத்திடமிலாதவர்க்குக்குடீசகமுஞ் *
சகங்களெங்கு, மேவிநடந்திடத்திடமுள்ளவர்க்குபகூதகமு *
மெனவிதித்தார்மேலோர். *

(இ-ள்) பாவி - தீதான — மந்தவிராகத்தில் - மந்தவிராகத்தில் — சந்நியாசங்கள் - துறவானவைகள் — ஒன்றும்பலித்திடாது - ஒன்றுஞ்சித்தியாது — தீவிரத்தில் - தீவிரவிராகத்தில் — குடீசகமும் - குடீசகசந்நியாசமும் — பகூதகமுமென்று - பகூதகசந்நியாசமுமென — இரண்டுதிறங்களுண்டாம் - இரண்டுவிதங்களுளவாம் — தாவிநடந்திடத்திடமிலாதவர்க்கு - எட்டிநடக்கப்பலமில்லாதவர்களுக்கு — குடீசகமும் - குடீசகசந்நியாசமும் —

சகங்களெங்குமேவி - உலகிலெவ்விடத்துமடைந்து — நடந்திடத்திடமுள்ளவர்க்கு - நடக்கப்பலமுள்ளவர்களுக்கு — பகூதகமுமெண - பகூதகசந்நியாசமுமுரியதென்று — மேலோர் - சான்றோர்கள் — விதித்தார் - நியமித்தார்கள் — (எ - று) - - - - - - *

[இ - ம்] குடீசக பகூதக சந்நியாசிகளினிலக்கணங்கூறியதாம். (௱௬௰)

(அ - கை.) தீவிரதரவிராக சந்நியாசங்களிரண்டின் பயன் கூறல்.

இருவகைதீவிரதரத்துமம்சனென்றும்பரமாம்சனென்றுஞ் *
சொல்வார், வருமம்சனுக்குமுத்திசத்தியலோகத்தன்றி *
வாராதென்பார், பரமாம்சனுக்குமுத்தியிவ்வுலகின்ஞா *
னத்தாற்பலிக்குமென்பார். திரமருவும்பரமாம்சன்றானு *
மிருவகையாகுஞ்செப்பக்கேளாய். *

(இ - ள்) தீவிரதரத்தும் - தீவிரதரசந்நியாசத்தும் — அம்சனென்றும் - அம்சசந்நியாசியெனவும் — பரமாம்சனென்றும் - பரமாம்சசந்நியாசியெனவும் — இருவகை - இரண்டுவிதமாக — சொல்வார் - சாதுக்களுரைப்பார்கள் — வருமம்சனுக்கு - வாராநின்றவம்சசந்நியாசிக்கு — முத்தி - மோட்சமானது — சத்தியலோகத்தன்றி - அயனுலகத்திற்கிடைப்பதன்றி — வாராதென்பார் - இம்மையிற்கிடையாதென்றுசொல்லுவார்கள் — பரமாம்சனுக்கு - பரமாம்சசந்நியாசிக்கு — முத்தி - மோட்சமானது — இவ்வுலகின் - இவ்வுலகத்தின்கண் — ஞானத்தாற்பலிக்குமென்பார் - ஞானத்தினாற்கிடைக்குமென்றுசொல்லுவார்கள் — திரமருவும் - ஸ்திரம்பொருந்திய — பரமாம்சன்றானும் - பரமாம்சசந்நியாசியும் — இருவகையாகும - இரண்டுவிதமாம் — செப்பக்கேளாய் - இதைச்சொல்லுதுங்கேளாய் — (எ - று)

[இ - ம்] அம்சபரமாம்சசந்நியாசிகளின்பயன்கூறினதாம் ...... (௱௬௧)

(அ - கை.) பரமாம்சசந்நியாசிகளப்பியாசியு மனுபவியு மெனவிருவகையாவரெனல்.

சிஞ்ஞாசுஞானவானென்றிரண்டுபேர்களவரிற்சிஞ்ஞாசு *
மெஞ்ஞானபூமியின்முன்மூன்றுபூமியுணடக்குமவிவேகி *
யாமேனுண, சுஞ்ஞானவானெனும்போன்சீவன்முத்தியடைந்தி *
ருக்குநதாயம்மம்லா, னஞ்ஞானமகலுமந்தச்சிஞ்ஞாசுமிரு *
வகையாமதுவுங்கேளாய். *

(இ - ள். ) சிஞ்ஞாசு - சிஞ்ஞாசெனவும் — சுஞானவானென்று - சுஞ்ஞா

னவானென்னவும்— இரண்டுபேர்கள் - இருவர்களாம் — அவரில் - அவ்விருவர்களில்— சிஞ்ஞர்சு - சிஞ்ஞாசென்பவர் — மெய்ஞ்ஞானபூமியின் - ஞானபூமியேழில் —மூன்மூன்றுபூமியுள் - மூந்தினமூன்றுபூமிகளில்— நடக்கும் - செல்லுகின்ற —விவேகியாஞேன் - விவேகமுள்ளவனுவன் — சுஞ்ஞானவாஞனென்போன் - சுஞ்ஞானவானென்பவன் — சீவன்முத்தியடைந்திருக்கும் சீவன்முத்தியைப்பெற்றிருக்கின்ற— தூயயேலோன் - பரிசுத்தமானமகானும்— அஞ்ஞானமகலும் - அறிவின்மைநீங்கும்— அந்தச்சிஞ்ஞாசுமிருவகையாம் - அச்சிஞ்ஞாசுமிரண்டுவிதமாம் — அதுவுங்கேளாய் - அதையுங்கேளாய்.—(எ - று) *

[இ - ம்] பரமாம்சத்தின் கூறுனசிஞ்ஞாசு சுஞ்ஞாசென்னுமிரண்டுசந்நியாசிகளின்லக்கணங்கூறியதாம............ (ாகூஉ)

(அ - சை) சிஞ்ஞாசென்பவனில்லறத்திலேனுந் துறவறத்திலேனுமிருந்து முத்தியை யடைவனெனல்.

பந்தமனை துறந்துசிலரதிதிகளாயிருந்தடைவர்பரமஞான *
மந்தணர்மன்னவர்வணிகர்சூத்திரராயிருந்துசிலரடைவர்ஞா *
ன, மிந்தவகைசாத்திரத்துமுலகத்துநடப்பதுங்கண்டிருந் *
துமைந்தா, சிந்தனையின்மயக்கமென்னசுருதியுத்தியனுபவ *
த்தாற்றெளிந்திடாயே. *

(இ - ள்) சிலர் - சிலர்கள் —பந்தமனை துறந்து - பந்தமானவில்வாழ்க்கையும்விட்டு— அதிதிகளாயிருந்து - துறவிகளாகவிருந்து— பரமஞானம் - பிரமஞானத்தை— அடைவர் - பெறுவார்கள் — சிலர் - சிலர்கள் — அந்தணர் - பிராமணராகவும் — மன்னவர் - க்ஷத்திரியராகவும் — வணிகர் - வசியராகவும் — சூத்திரராயிருந்து - சூத்திரராகவுமிருந்து — ஞானம் - பிரமஞானத்தை— அடைவர் - அடைவார்கள்— இந்தவகை - இவ்வகையை — சாத்திரத்தும் - ஆகமப்பிரமாணத்திலும் — உலகத்துநடப்பதும் - உலகத்திடைப்பதாகியப்பிரத்தியட்சப் பிரமாணத்திலும் — கண்டிருந்தும் - பார்த்திருந்தும்— மைந்தா - மகனே— சிந்தனையின்மயக்கமென்ன - மனதிற்சந்தேகமேன் — சுருதியுத்தியனுபவத்தால் - சுருதி யுத்தி யனுபவமென்னுமூன்றினுலும்— தெளிந்திடாய் - தெளியாய் — (எ - று) *

[இ - ம்] முத்தியை யடைதற்கு விராகத்தால்வருஞ் சாந்தியேகாரணமன்றி யில்லறந் துறவறமென்னு மிரண்டுமல்லவெனக்கூறியதாம். (ாகூக)

(அ - சை) மேற்கூறுவோமென்றவாறே முற்கூறியசர்வார்த்தங்களுமட

ங்கியவேதங்களின்முடிவானவித்தியானந்தமாகக் கூறுவான்றொடங்கியி ச்செய்யுளிற்பிரமமேகூடஸ்தனெனக்கூறுகின்றார்.

பிறந்ததுண்டானாலன்றோபிறகுசாவதுதானுண்டாம் *
பிறந்ததேயில்லையென்னும்பிரமமாவதுவுநானே *
பிறந்ததுநானன்றாகிற்பிரமமென்றந்தநானே *
பிறந்ததுமிறந்ததற்றபிரமமாநானேநானே. *

(இ-ள்) பிறந்ததுண்டானாலன்றோ - சநித்ததுளதாயினன்றோ — பிறகு சாவதுதானுண்டாம் - பின்மரித்தலுளதாம் — பிறந்ததேயில்லையென்னும் - சநித்ததேயின்றென்னும் — பிரமமாவதுவும் - பிரமமென்பதும் — நானே - நானேயாம் — பிறந்ததுநானன்றாகில் - சநித்ததுநானல்லனாயின் — பிரமமென்றந்தநானே - பிரமமென்றுசொல்லப்பட்டவந்தநானே — பிறந்ததுமிறந்ததற்ற - உற்பத்தியும்லயமுமில்லாத — பிரமமாநானே நானே - பிரமமாகியநானேநான். — (எ-று). *

[ப-ம்.] சாமவேதமகாவாக்கியப்படி யதுநீயானாயென்பார் பிரமமாநானேயென்றார். பிரமமென்பததுவென்னுமானந்தமு நானென்பது நீயென்னும் வித்தையும் ஆமென்பதானாயென்னுமைக்கியமுமா மெனக்கொள்க............ ... .......... .... . ......... . .............. (௫௬௪)

(அ-கை) கூடஸ்தனேபிரமமெனக்கூறுகின்றார்

நானென்றபிரமமானநானேநானறியேனென்றா *
னானென்பதேதுபின்னைநம்முடபுத்தியென்னிற் *
றானதுமயக்கந்தன்னிற்சாகுமேசாவாதாகி *
னானெனநிறைந்திருந்தஞானமாநானேநானே *

(இ-ள்) நானென்றபிரமமான - யானென்றுசொல்லும்பிரமமாகிய — நானே - யானே — நானறியேனென்றால் - யான்காண்கிலேனென்னின் — நானென்பதேது - யானென்பதியாது — பின்னை - பின்பு — நம்முடபுத்தியென்னில் - நமதுபுத்தியென்றுசொல்லில் — அது - அப்புத்தியும் — மயக்கந்தன்னிற்சாகுமே - சுழுத்திமயக்கத்திலிறக்குமே — சாவாதாகில் - அங்ஙனமரியாதிருக்குமாயின் — நானே நானே - யானே — நானெனநிறைந்திருந்த - நானென்றுபூரணமாகவிளங்கிய — ஞானமாம் - மெய்ஞ்ஞானமாம் — (எ-று) - - - - - - *

[ப-ம்] இருக்குவேத மகாவாக்கியப்படி ஞானமேபிரம மென்பார்

நாமென்ற பிரமமென்றார். நாமென்பது ஞானமாகியவித்தையெனவும் பிரமமென்ப தானந்தமெனவுங்கொள்க.... ......... .. .....................(௱சுரு)

(அ-கை) வித்தியானந்தத்தினொருமைகூறல்

நிறைந்தவாறெந்தவாறு நிலைதெரிந்திலனென்றாயே *
லறிந்ததாஞ்சுழுத்திதன்னிலாநந்தமதுவேயாகுங் *
குறைந்ததுக்கானந்தந்தான்குவலயந்தன்னிலில்லை *
நிறைந்ததேயிந்தவான்மா நிதானமிவ்வறிவுதானே *

(இ-ள்) நிறைந்தவாறு- யான்பரிபூரணமானவிதம்— எந்தவாறு - எவ்வண்ணம்— நிலைதெரிந்திலன்- நிச்சயந்தெரிகிலன்—என்றாயேல்- என்பாயானால் — அறிந்ததாஞ்சுழுத்திதன்னில் - நனவிற்சுழுத்தியின்கணுள்ள—ஆநந்தம்- நிரதிசயானந்தமானது —அதுவேயாகும- அப்பூரணமேயாம்— குறைந்ததுக்கானந்தந்தான்- ஏகதேசமானசுகதுக்கங்கள்— குவலயந்தன்னிலில்லை- உலகத்தின்கணில்லையாம்— இந்தவான்மா - இவ்வாத்மாவே— நிறைந்தது- பூரணமானது—இவ்வறிவுதான் - இச்சைதன்னியமே— நிதானம்- நிதானமாம் — (எ-று) - - - *

[ப-ம்] யசுர் வேத மகாவாக்கியப்படி அகம்பிரமாஸ்மி யென்பார். நிறைந்ததேயிந்தவாத்மா நிதானமிவ்வறிவுதானே யெனக்கூறினர்.

நிறைந்ததென்பது பிரமமென்னு மானந்தமும் ஆத்மாவென்ப தகமென்னும் வித்தையு நிதான மிவ்வறிவென்ப தஸ்மி யென்னு மைக்கிய முமாமெனக்கொள்க............ ......... ............ ....... ... ....... ..... .........(௱சுஎ)

(அ-கை.) வித்தியானந்தவொருமையானசுவானுபூதியேதானெனல்.

மனத்தினாலெண்ணித்தானேவந்ததிவ்வுலகமாகு *
நினைத்திடிலனேகலோக நிற்பதவ்வறிவிலன்றோ *
வனைத்தையுங்கடந்தப்பாலுமந்தமற்றறிவிதாமென் *
றெனைத்தனிவிசாரித்திட்டாலேகமாய் நிறைந்தோனானே *

(இ-ள்.) மனத்தினாலெண்ணி - மனோசங்கற்பத்தினால்—வந்ததிவ்வுலகமாகும்- இவ்வுலகமுதித்ததாம்— நினைத்திடில் - கருதுமிடத்து — அநேகலோகநிற்பது- அநந்தவுலகமிருப்பது — அவ்வறிவிலன்றோ - அந்தஞானத்திலன்றோ— அனைத்தையுங்கடந்து- யாவையுந்தாண்டி —அப்பாலும- மேலும்— அந்தமற்று- முடிவிறந்த— அறிவிதாமென்று-ஞானமிதுயாமென்று — எனை - என்னை— தனிவிசாரித்திட்டால்- தனிமையாகவிசாரணைசெய்தால்— நானே - யானே— ஏகமாய்நிறைந்தோன் - பூரணமாகநிறைந்தவனும்— (எ-று.) - - - *

[ப-ம்] அதர்வணவேதமகாவாக்கியப்படி அயமாத்மாபிரமமென்பார் ஏகமாய்நிறைந்தோனுனேயென்ருர். அந்றவென்பது அற்றெனத்திரிந்து நின்றது. ஏகமென்பது பிரமமென்னு நித்தியானந்தமும் நிறைந்தென்ப தாத்மாவென்னும் வித்தையும் நாமெனன்ப திவ்விந்தியானந்தத்திலேங்கியத்தி லுதித்தசுவானுபூதியாகிய வயமென்னுந் தானுமாமெனக்கொள்க.

[இ-ச-க-ம்] நான்குவேதங்களின் முடிவாயுள்ளமகாவாக்கியார்த்த சென்னியமான வித்தியானந்த வைக்கியஸ்வரூபமான நிரதிசயானந்தசாக்ஷாத்காரமேதாமெனக்கூறியதாம். ........... ............................ (௩௬௭)

(அ-கை) முற்கூறியகற்பிதங்களனைத்தையும்விருத்திபுளடக்கியவ்விருத்தியை நீக்கிற்சுவானுபவமுதயமாமெனக்கூறல்

அந்தவாறிருந்துகொண்டேயானந்தமனுபவிக்க ✻
வெந்தவாறிருந்துகொண்டாலெனக்கிதுதெரியுமென்னி ✻
லிந்தமூன்றவத்தைதம்முளெழுந்திடும்விருத்திநீக்கி ✻
லந்தவாறிருந்துநீயுமானந்தமடையலாமே. ✻

(இ-ள்) அந்தவாறிருந்துகொண்டு - அவ்வாறுபூரணமாகவிருந்துகொண்டே — ஆனந்தமனுபவிக்க - பூரணநந்தத்தையனுபவிக்க — எந்தவாறிருந்துகொண்டால் - எவ்வண்ணமிருந்தால் — எனக்கிதுதெரியுமென்னில் - எனக்கிவ்வனுபவந்தரிசனமாமென்பாயாயின் — இந்தமூன்றவத்தைதமமுள் - இம்மூன்றவத்தைக்குள் — எழுந்திடும்விருத்திநீக்கில் - உதிக்கின்றவிருத்தியைத்தள்ளில் — அந்தவாறிருந்து - அவ்வாறுபரிபூரணஞானமாயிருந்து — நீயுமானந்தமடையலாம் - நீநிரதிசயானந்தத்தையடையலாம் — (எ-று) [இ-ம்] வெளிப்படை. .............. .......... (௩௬௮)

(அ-கை) விருத்திநீங்குதற்கு மூவகையுபாயங் கூறுவான்ருெடங்கியிச்செய்யுளிலனுபவவுபாயங்கூறுகின்ருர்.

வாதனைவசத்தினலேவருகிறவிருத்தியெல்லா ✻
மேதிஞலடக்கலாகுமென்றுதான்விசாரஞ்செய்யின் ✻
போதமாமிராசன்ருனைப்புத்தியைப்புலன்களெல்லாந் ✻
தாதராயிருக்கப்பெற்ருற்சகலமுமடங்குந்தானே ✻

(இ-ள்.) வாதனைவசத்தினலே - வாசனைவசத்தால் — வருகிறவிருத்தியெல்லாம் - வருகின்றவிருத்திகளனைத்தையும் — ஏதினலடக்கலாகுமென்று - யா

திறுலொடுக்கலாமென்று — விசாரஞ்செய்யின் - விசாரிக்கின் — போத மாமிராசன்றானாய் - தான்ஞானவரசனாய் — புந்தியைப்புலன்களெல்லாம் - புத்திமுதலிய விடயங்களனைத்தும் — தாதராயிருக்கப்பெற்றால் - தாசராயிருக்கப் பெறின் — சகலமுமடங்கும் - அனைத்துமொடுங்கும் — (எ-று) - - - - - - *

[இ-ம்] தானாகிய நித்தியானந்தபோதமேல்பூரணமுதலியயாவிலும் விளங்கின்விருத்திகணீங்குமென்பதாம்.... ..... ... ............ ..... .... (௱சூகூ)

(அ-கை.) ஏனையவப்பியாசவுபாயங்களிரண்டையுங்கூறல்.

விருத்திகடாமுமின்னும்விநோதமாம்யோகத்தாலே *
துருத்திபோலூதமூச்சைச்சுகமுடனடக்கினிற்கும் *
கருத்ததற்கில்லையென்னிற்காரணசரீரமாகிப் *
பெருத்தவோரவித்தைதன்னைப்பிடிங்கிடிலடங்குந்தானே *

(இ-ள்) விருத்திகடாமும் - விருத்திகளானவை — இன்னும் - மேலும் — விநோதமாம் - விநோதமான — யோகத்தால் - யோகத்தினால் — துருத்திபோலூதுமூச்சை - துருத்தியைப்போலவூதாநின்றசுவாசத்தை — சுகமுடனடக்கின் - இன்பத்தோடுமொடுக்கின் — நிற்கும் - அடங்கும் — கருத்ததற்கில்லையென்னில் - அதற்குமனமின்றாயின் — காரணசரீரமாகிப்பெருத்த - காரணதேகமாகத்தடித்த — ஓரவித்தைதன்னை - ஒப்பற்றவவித்தையை — பிடிங்கிடில் - பெயர்க்கின் — அடங்கும் - ஒடுங்கும் — (எ-று)

[இ-ம்] பிராணயந்தனவுபாயத்தைக்கௌணமாகக்கூறிய வித்தைநீக்கவுபாயத்தைமுக்கியமாகக் கூறினானென்பதாம்...... ... .. ............... (௱எ௰)

(அகை.) அவித்தையைக்களையுமுபாயமியாதெனவினாதலுக்குத்தரங்கூறல்

காரணசரீரந்தன்னைக்களைவதெவ்வாறென்றேதில் *
லாரணம்பொய்சொல்லாதேயதன்பொருளசத்திலுன்னிப் *
பூரணமாகுமென்மேற்புவனங்கடோற்றுமென்று *
தாரணைவந்ததாகிற்றரித்திடுமவித்தையெங்கே. *

(இ-ள்) காரணசரீரந்தன்னை.. காரணதேகத்தை — களைவது - கெடுப்பது — எவ்வாறென்றேதில் - எவ்விதமென்றுகேட்கில் — ஆரணம் - வேதமானது — பொய்சொல்லாதே - நிச்சயத்தைச்சொல்லுமாதலால் — அதன் பொருள் - அதன்மகாவாக்கியார்த்தத்தை — அசத்திலுன்னி - உளத்திற்சிந்தித்து — பூரணமாகுமென்மேல் - பரிபூரணமாகியவென்னிடத்தில் — புவனங்கடோற்றுமென்று - ஆரோபமாகச்சகங்கடோற்றுமென்று —

தாரணைவந்ததாகில்-உறுதிவந்ததானால்—அவித்தை-அவித்தையானது—எங்கேதரித்திடும்- எவ்விடத்திலிருக்கும்—(எ-று.) - - *

[இ-ம்.] வேதநிச்சயப்படி குருவாக்கியத்தாற் சர்வம்பிரமமயமென்னுமனுபவமுண்டாயினவித்தை நசிக்குமென்பதாம்……………… (௱எக)

(அ-கை) சர்வம்பிரமமயமென்னு ஞானமுதித்தற்கனுபவங்கூறல்

அப்படியிருக்கச்சித்தமலைதலால்விவகாரத்தி *
லெப்படிகூடுமென்னிலென்னைவிட்டொன்றுமில்லை *
யிப்படிகண்டவெல்லாமென்மயமென்சனுப்போற் *
கற்பிதமென்றுதானேகாண்கின்றசித்துநானே *

(இ-ள்) விவகாரத்தில்- விவகாரங்களில்— சித்தம்- மனமானது — அலைதலால்- சுழல்வதனால்— அப்படியிருக்க- அங்ஙனநிற்க — எப்படிகூடுமென்னில் - எங்ஙனங்கூடுமென்றால் — என்னைவிட்டொன்றுமில்லை - என்னைத்தவிரவேறொருவஸ்துவுமில்லை — இப்படிகண்டவெல்லாம்- இவ்விதமாகக்கண்டகிரியங்களனைத்தும் — என்கனுப்போல் - எனதுசொர்ப்பனத்தைப்போல— கற்பிதமென்று- பொய்யென்று— காண்கின்ற- பார்க்கின்ற— என்மயம்- எனதுருவமான— சித்துநானே- சைதன்னியமேதான் —(எ-று) - - - *

[இ-ம்]கற்பிதமாகக்காணப்பட்ட கிரியங்களனைத்துந்தனதுசிற்பிரகாசமாகவிளங்குகின்றதென்னு மனுபவதிஷ்டியால் யாவுந்தன்மயமாகவிளங்குமென்பதாம்…… …… ……………… …… ………… ….(௱எஉ)

(அ-கை.) இச்சித்தேயானந்தவடிவமாமெனல்

சித்துநானிறைந்தோனென்றதிடமறவாதிருந்தா *
லெத்தனையெண்ணினுமேதுசெய்தாலுமென்ன *
நித்திரையுணர்ந்தபின்புநிற்கின்றகனுவைப்போல *
வத்தனையும்பொய்தானேயானந்தவடிவுநானே *

(இ-ள்.) நான்- யான்— சித்து- சைதன்னியமாக— நிறைந்தோனென்ற- பூரணமானவனென்னும்— திடமறவாதிருந்தால் - திடப்பிரஞ்ஞையோடுகூடியிருந்தால் — எத்தனையெண்ணினும் - எவ்வளவுசங்கற்பித்தாலும்— ஏதுசெய்தாலும் - எக்கிரியைசெய்தாலும் — என்ன - அதனாற்குற்றமென்ன - நித்திரையுணர்ந்தபின்பு - நித்திரைதெளிந்தபின்பு— நிற்கின்றகனுவைப்போல - நிற்குஞ்சொர்ப்பனம்போல — அத்தனையும்பொய்தான் - அவ்வளவுமித்தையாம் — தானே- யானே — ஆனந்தவடிவு- ஆனந்தஸ்வரூபமாம்— (எ-று) - - - *

[இ-ம்.] தானேசித்தென்னு மனுபவமுதிக்கில் யாவுமித்தையாய்த்தானந்தவடிவனாவனென்பதாம். ... .... ........ .. ..... ............... ....(௱எ௩)

(அ-சை) இவ்வனுபவமுதிப்பதற்கேதுவானவுறுதிகூறல்

நானெனவுடலைத்தானே நம்பினேனநேகசென்ம *
மீனராய்ப்பெரியோராகியிருந்தவையெலாமிப்போது *
கானலில்வெள்ளம்போலக்கண்டசற்குருவினாலே *
நானெனவென்னைத்தானே நம்பியீடேற்னேனே. *

(இ-ள்) அநேகசென்மம்- அனந்தசநநங்களில் — உடலைத்தான் - தேகத்தையே— நானெனநம்பினேன் - யானென்றுநம்பினேன்—ஈனராய்-இழிந்தவராகவும் — பெரியோராகி - உயர்ந்தவராகவும் — இருந்தவையெலாம்- இருந்தவைகளனைத்தையும்—இப்போது- இச்சமயத்தில்—கானலில்வெள்ளம்போல- கானற்சலத்தைப்போல — சற்குருவினால் - ஆசிரியருபதேசத்தினால்— கண்டு- பார்த்து — என்னைத்தானே - எனதுபிரமவடிவத்தையே— நானெனநம்பி- யானென்றுநம்பி— ஈடேறினேன்- ஈடேறினேன் —(எ-று) *

[இ-ம்] குருகிருபையினாற் றேகநானென்னு நம்பிக் கையைவிடுத்துச் சித்தேநானென்னுநம்பிக்கையுண்டானாற் சின்மாத்திரமானமுத்தியைப் பெறுவனென்பதாம்........ .................... .... ............................ (௱எச)

(அ-௯) குருகிருபையைவியந்துமகிழ்தல்

என்னபுண்ணியமோசெய்தேனே தயாக்கியமோகாணே *
னன்னிலந்தனிலெழுந்த நாரணன்கிருபையாலே *
தன்னியனானேனுத்தரீயத்தைவீசுகின்றேன் *
றன்னியனின்னு நானே தாண்டவமாடுகின்றேன். *

(இ-ள்)என்னபுண்ணியமோசெய்தேன்- என்னதருமஞ்செய்தேனோ— எதுபாக்கியமோ- யாதுபாக்கியம்பெற்றேனோ— காணேன் - தெரிகிலேன்— நன்னிலந்தனில்- நன்னிலமென்னுநகரத்தில் — எழுந்த - மானிடராகவவதரித்த— நாரணன் - நாராயணனென்னுமெனதாசிரியரது—கிருபையால்-கருணையினால்— தன்னியனானேன்- கிருதார்த்தனான— நான் - யான்— உத்தரீயத்தைவீசுகின்றேன் - அங்கவஸ்திரத்தைபாகாயத்திலெறிந்துவிளையாடுகின்றேன்— தன்னியனானே - கிருதார்த்தனானயானே— இன்னும் - மேலும் — தாண்டவமாடுகின்றேன் - நடனஞ்செய்கின்றேன்— (எ-று.)......... ......... .... .... . .......... ..... ... ...... (௱எ௫)

(அ-கை) தன்னனுபூதி விளக்கத்துக்குத்தக்க நாமந்தனக்குத்தரித்த மாதா பிதாவைப் புகழ்தல்.

தத்துவஞானம்வந்தசந்தோஷவதிசயத்தா *
னித்தமாடுவன்காணென்றநிலைமுன்னமேயறிந்த *
சத்தியமதனாலன்றோதாண்டவாவென்றழைத்தா *
ரத்தனைமகிமையுள்ளோரன்னையும்பிதாவுந்தாமே. *

(இ-ள்.) தத்துவஞானம்வந்த - அத்துவிதஞானமுதித்த — சந்தோஷவதிசயத்தால் - பேருவகையானவற்புதத்தினால் — நித்தமாடுவன்காணென்ற - எப்போதுமானந்தநடனஞ்செய்வனென்னும் — நிலை - நிலைமை — முன்னமேயறிந்தசத்தியமதனால் - முன்பேதெரிந்தவுண்மையினால் — அன்றோ - அல்லவா — தாண்டவாவென்றழைத்தார் - தாண்டவராயனென்று நாமந்தரித்துக்கூப்பிட்டார் — அன்னையும்பிதாவும் - மாதாபிதாக்கள் — அத்தனைமகிமையுள்ளோர் - அவ்வளவுமகிமையையுள்ளவர்கள் — (எ-று) ௩௭௬

(அ-கை) நிரதிசயானந்தவனுபூதியின்றாமைகூறல்.

வந்தவோரிவ்வானந்தமகிழ்ந்ததாரோடேசொல்வேன் *
சிந்தையிலெழுந்துபொங்கிச்சகமெலாநிறைந்துதேங்கி *
யந்தமில்லாததாயிற்றப்படிகுருவேதாந்த *
மந்திரமருளுமீசன்மலரடிவணங்கினேனே. *

(இ-ள்.) வந்த - அறிவிலுதித்த — ஓர் - ஒப்பற்ற — இவ்வானந்தம் - இந்நிரதிசயானந்தத்தினால் — மகிழ்ந்தது - மகிட்சியடைந்ததை — ஆரோடே சொல்வேன் - ஆருடனுரைப்பேன் — சிந்தையிலெழுந்து - உளத்திலூறி — பொங்கி - மேலிட்டு — சகமெலாநிறைந்துதேங்கி - உலகங்களனைத்தும்பூரணமாய் — அந்தமில்லாததாயிற்று - முடிவில்லாததாயினது — அப்படி - அவ்வண்ணம் — வேதாந்தமந்திரம் - வேதமுடிவானமகாவாக்கியார்த்தரகசியத்தை — அருளுமீசன் - அருளாநின்றவிறைவனாகிய — குருதேசிகரது — மலரடிவணங்கினேன் - கமலமலர்போன்றதிருவடிகளைத் தொழுதேன் — (எ-று) - - - - - *

[இ-௯-௧-ம்] சிந்தனத்துதித்தவானந்தமதனைக்கரைக்கச்சகசீவபரமானவனைத்துந் தானாகிய சிதானந்தவடிவமாகவே விளங்குகின்றதென வித்தியானந்தத்தைமுடித்ததாம்......... ....................... ... ,... ....... ...... ...(௩௭௭)

(அ-கை) இந்நூலால்விளையும்பயன்கூறல்.

வித்தியானந்தமிந்தவிதமெனவிளம்பினேமே *
பத்தியாயிந்தநூலைப்பார்த்தனுபவித்தபேர்க *
ணித்தியதருமநிட்டை நிலைதனையறிந்துசீவன் *
முத்தியையடைந்திருந்தமுனீஸ்வரராகுவாரே. *

(இ-ள்) வித்தியானந்தம்- ஞானானந்தமானது — இந்தவிதமென - இவ்வகையாமென்று — விளம்பினேம்- சொல்லினேம் — பத்தியாய்- அன்பாக— இந்தநூலைப்பார்த்து- இஞ்ஞானசாஸ்திரார்த்தத்தையுணர்ந்து— அனுபவித்தபேர்கள் - அப்பொருளையறிந்தபடியனுபவமானபேர்கள்— நித்தியதருமநிட்டை - நித்தியமானஞானநிஷ்டையின் — நிலைதனையறிந்து- நிலைமையைத்தெரிந்து — சீவனமுத்தியையடைந்திருந்த - சீவன்முத்திப்பதத்தைப்பெற்றிருந்த — முனீஸ்வரராகுவார் - முனிசிரோஷ்டராவார்கள் —(எ-று.) [இ-ம்] வெளிப்படை.................. (௱௭௮)

(அ-கை) குருவாக்கியப்படியிந்நூற்சம்பூரணமாயிற்றெனல்.

ஆரணப்பொருளாம்வித்தையானந்தம்விளங்கவேதுங் *
காரணங்குறைவில்லாமற்கைவல்யநவநீதத்தைப் *
பூரணமாக்கவேண்டிப்பூர்வமாநன்னிலத்தி *
னாரணகுருநமக்குநவின்றனர்கனவில்வந்தே. *

(இ-ள்) ஆரணப்பொருளாம்- வேதமுடிவினுள்ளமகாவாக்கியார்த்தமான— வித்தையானந்தம்விளங்க - ஞானானந்தம்விளங்கும்பொருட்டு — கைவல்யநவநீதத்தை - கைவல்யநவநீதமென்னுஞானசாஸ்திரத்தை — ஏதும்- எவ்வளவும்— காரணம்- எடுத்துக்காட்டுங்காரணங்களில்— குறைவில்லாமல் - குறைவுபடாமல்—பூரணமாக்கவேண்டி - நிறைவாகச்செய்யவிரும்பி — பூர்வமாநன்னிலத்தில் - பழமையாகிறநன்னிலமென்னுந்தலத்தின்மாண்டவடிவமாகவெழுந்தருளிய— நாரணகுரு- நாராயணதேசிகரானவர்— நமக்கு- எமக்கு—கனவில்வந்து- சொர்ப்பனத்திற்றோன்றி—நவின்றனர் - அருளிச்செய்தார்—(எ-று) [இ-ம்] வெளிப்படை (௱௭௯)

(அ-கை) இந்நூலாசிரியர்சிறப்புக்கூறல்.

அண்ணறன்னருளினாலேயசம்புறமின்றியொன்றா *
யெண்ணமிலிலக்கியார்த்தத்தின்பொருளதுநானென்ன *
நண்ணினசரீரமாதிநாதத்தினுபாதியென்றே *
கண்ணதாயனைத்துங்காணக்காட்டினனன்றண்டவேசன். *

(இ-ள்.) அண்ணறன்னருளினால் - தேசிகரதுகிருபையினால் —அசம்புற

மின்றி-உள்வெளியென்பதின்றி— ஒன்ருய்- ஏகமாய்— எண்ணமில்-எண்ணுதற்கரிய— இலக்கியார்த்தத்தின்பொருள்-இலக்கியார்த்தத்தின்பொருட்படி— அதுநானென்ன-பிரமமாகியவதுவேகூடஸ்தனுகியநானென்னும்படி— நண்ணினசரீரமாதி-பொருந்தியதேசமுதலியவற்றை— நாதத்திறுபாதியென்று - மாயாவுபாதியென்றுகளைந்து— அனைத்தும்-சகலத்தையும்— கண்ணதாய்- ஞானகாரமாய்— காண-தரிசிக்கும்படி— தாண்டவேசன்- தாண்டவேசனென்னுமிந்நூலாசிரியர்—காட்டினன்- தரிசிப்பித்தான்— (எ-று) [இ-ம்] வெளிப்படை............................(௱௯௰)

(அ-கை) இம்மரபினுலனுபவமுதிக்குமவர்களேசுவானுபவிகளெனல்.

ஆன்றபதமாமூன்றற்குமதுநீயாறுயெனும்பொருளிற் *
சான்றதுரியாத்தமெனுந்தடையற்றிலங்கொண்சைதன் *
னிய மூன்றியுணர்ந்தோர்விகற்பமபக்கொழித்துத்தடை *
யுமூடறுத்துத், தோன்றித்தானேதாஞவர்துலங்குமவர்க் *
கேசுவானுபவம். *

(இ-ள்) ஆன்ற- மாட்சிமையான — பதமாமூன்றற்கும் - மகாவாக்கியத்தின் றத் தொ மசி யென்னுமூன்றுபதத்திற்கும் — அது - அதுவென்னும்பிரமமும்— நீ- நீயென்னுங்கூடஸ்தனும்— ஆனுய் - இவ்விரண்டினைக்கியமும்— எனும்பொருளின்- என்கின்றவர்த்தத்தில்— சான்ற- நிறைந்த— துரியாத்தமெனும்- துரியாதீதமென்கின்ற—தடையற்றிலங்கு-மறைப்பின்றியபரோக்ஷமாகவிளங்குகின்ற— ஒண்சைதன்னியம்-சுயநதேசசுள்ளமெய்யுணர்வை—ஊன்றியுணர்ந்தோர்- ஸ்திரமாகத்தெரிந்தவர்கள்—விகற்பமபக்கொழித்து- பேதமானபிரமையைநீக்கி— தடையுமூடறுத்து- அறிவின்மையையுங்கெடுத்து— தோன்றி- சதோதயமாய்—தானே,தாஞவர்-தன்மயமாவர்— அவர்க்கே- அவ்வறிஞர்க்கே—சுவானுபவம்- சுவானுபவமானது— துலங்கும்- பிரகாசிக்கும்.— (எ-று.) *

[இ-ம்] வெளிப்படை..........................................(௱௯௧)

(அ-கை) இந்நூலாசிரியர்தன்னுசிரியனைப்புகழ்தல்.

என்னுமாவாக்கியநான்குமிசைக்கும்வித்யானந்தமிது [ருே *
சொன்னநாராயணன்பாதந்தொழுதுதுதித்தோர்துகளற் *
றின்னமாணுக்கன்குருவாற்சந்தேகந்தீர்ந்திடுபதத்தே *
துன்னிநிறைந்துநின்ருேர்கடுயேமுத்தராகுவரோ. *

(இ-ள்) என்னும்- சுபாவமென்கின்ற— மாவாக்கியநான்கும்- நான்குவேதத்தின்முடிவானநான்குமகாவாக்கியங்களும்—இசைக்கும்-சொல்லு

ம்—வித்யானந்தமிது- ஞானனந்தமிதுவாம்—சொன்ன - இத்தனையருளி ய— நாராயணன்யாதம்- நாராயணனென்னுமாசிரியருபயபாதங்களை— தொழுது- வணங்கி— துதித்தோர்- துதிசெய்தவர்கள்—துகளற்றோர் - களங்கமற்றவராவர்— இன்ன - இத்தன்மையான — மாணக்கன்-சீடனான வன்— குருவால்- ஆசிரியரால்—சந்தேகந்தீர்ந்திடு- ஐயநீங்கிய— பதத் தேதுன்னி - இப்பதத்தையடைந்து — நிறைந்துநின்றோர்கள் - பூரண மாகியிருந்தவர்கள் — தூயமுத்தராகுவர் - பரிசுத்தமானசீவன்முத்தரா வார்கள் —(எ-று) - - - - *

[இ-ம்] நான்குவேதங்களின்முடிவிலுள்ள நான்குமகாவாக்கியார்த்த முமொன்றான வித்தியானந்தமே யனுபவமெனவு மஃதை யடைந்தவர் களே சீவன்முத்தரெனவுங் கூறினதாம் . ........ ...... .............(௱அஉ)

(அ-கை) இந்நூற்செய்தவிதங்கூறல்.

தத்துவவிளக்கத்தாலுஞ்சந்தேசந்தெளிதலாலு *
மொத்திருள்விடாதமாயாவுள்ளிருளிரியவோங்குஞ் *
சித்ததாமொளிவிளங்கச்செய்துபின்விருத்திபேதப் *
புத்தியால்வருமையத்தைப்புரையறத்தெளிவித்தாண்டான். *

(இ-ள்) தத்துவவிளக்கத்தாலும் - தத்துவவிளக்கமென்னும்படலத்தினு லும்—சந்தேகந்தெளிதலாலும்-சந்தேகந்தெளிதலென்னும்படலத்தி னுலும்—,ஒத்து- பொருந்தச்செய்து— இருள்விடாத- அந்தகாரநீங்கா த—மாயா-மாயையென்னும்—உள்ளிருளிரிய- அகத்திருட்கெட—ஓங் குஞ்சித்ததாமொளி- உயராநின்றஞானப்பிரகாசத்தை— விளங்கச்செய் து- திகழும்படிசெய்து— பின்- பின்பு — விருத்திபேதப்புத்தியால்- விருத்திவிகற்பமானவறிவினல்— வருமையத்தை - வாராநின்றசந்தேகத் தை — புரையறத்தெளிவித்து - குற்றமறத்தெளிவித்து — ஆண்டான்- இரட்சித்தாரிந்நூலாசிரியர்— (எ-று) ............... .... ............(௱அங)

(அ-கை) இந்நூலாசிரியனைத்துதித்தல்.

ஆண்டதேசிகனுமையனாரணனனந்தன்பாதம் *
பூண்டுமூவாரோபத்தாற்பொய்ம்மயக்காய்வந்தத்தை *
மாண்டநல்லபவாதத்தான்மாய்த்தருணேக்கத்தென்றுங் *
காண்டிடவைத்தளித்தகாரணபோற்றிபோற்றி. *

(இ-ள்.) ஆண்ட- தடுத்தாண்ட—- தேசிகனுமையன்-குருசாமியாகிய — நாரணன்- நாராயணனென்னும்— அனந்தன்-முடிவற்றவனது — பா தம்பூண்டு- திருவடியைச்சிரசிற்றரித்து— மூவாரோபத்தால்- சீவேஸ்வர

சகத்தென்னுமென்றுவிதகற்பனையால்—பொய்ம்மயக்காய்வந்தத்தை-இல்லாதமயக்கமாயுண்டானதை—மாண்ட- மாட்சிமையான— நல்லபவாதத்தால்- நன்மையானஅபவாதவுத்தியினால்—மாய்த்து- கெடுத்து— அருணோக்கத்து-கிருபாநோக்கத்தினால்—என்றுங்காண்டிட-எப்போதுமபரோக்ஷஞானமாகத்தரிசிக்க—வைத்து-திருவடிசூட்டி—அளித்த-இரக்ஷித்த—காரணபோற்றிபோற்றி-காரணனேசரணஞ்சரணம்(எ-று) (௱அச)

(அ-கை) இந்நூலைப்புகழ்தல்.

குலவுசற்குருவின்பாதக்குளிர்புனற்றலைமேற்கொண்டா ✻
லுலகினிற்றீர்த்தமெல்லாமுற்றபேறடைவர்போல ✻
நலமெய்யாகியகைவல்யநவநீதநூலைக்கற்றாற் ✻
பலகலைஞானநூல்கள்படித்தஞானிகளாய்வாழ்வார் ✻

(இ-ள்.) குலவு-விளங்காநின்ற—சற்குருவின்- தேசிகரின்—பாதக்குளிர்புனல்- அகத்தையும்புறத்தையுங்குளிரச்செய்கின்றபாததீர்த்தத்தை—தலைமேற்கொண்டால்- சிரத்தின்மேற்றரிக்கின்— உலகினில்-சகத்திலுள்ள— தீர்த்தமெல்லாம்- புண்ணியதீர்த்தங்களனைத்தும்— உற்றபேறு-ஸ்நாநஞ்செய்தபயனை— அடைவர்போல - பெறுவார்களைப்போல்— நலமெய்யாகிய-நன்மையுமுண்மையுமாகிய—கைவல்யநவநீதநூலை- கைவல்யநவநீதமென்னுஞானசாஸ்திரத்தை— கற்றால் -அப்பியாசித்தால்—பலகலை- அனந்தங்கல்விநூல்களின்சாரமான — ஞானநூல்கள் - ஆத்மஞானசாஸ்திரங்களை — படித்தஞானிகளாய் - அப்பியாசித்தஞானவான்களாக—வாழ்வார்- வாழ்வார்கள்— (எ-று)- .. - ✻

[இ-ரு-க-ம்] சுருதி குரு சுவானுபவங்களை நவ நவமாகத் துதித்ததாம்................................................................................(௱அரு)

சந்தேகந்தெளிதற்படலமுற்றிற்று.

ஆ படலம்-உஇ-செய்யுள்-உகரு.

கைவல்யநவநீதமூலமுமுரையும்



# கைவல்யநவநீதப்பாட்டகராதி.



கைவல்யநவநீதப்பாட லகராதிமுற்றிற்று.

